## இதுவும் அது.

### வேறு.

வட்டவுல கிற்கொடிய நெட்டவுணரைச்சமரின் மட்டற விடித்தெதிரெயிற், கிட்டவறு பட்டதலை நட்டு விழ மொட்டையுடல் கெட்டுரு டாக்குருதி நீர், கொட்டநுரை கட்டிட மிகச்சுழி சுழித்தலை கொழித்து நதி யிற்புகவழி, விட்டுறுமி நெட்டையிடு மக்கினி குலத்தரச விக்ரம ரெடுத்தசிலையெ. (கஉ)

(இ-ள்.) வட்டவுலகில்-சக்ராகாரமாகிய இவ்வுலகத்தில், விக்ரமர் அக்கினி குலத்து அரசர் எடுத்தசிலை-விஜயத்தைக் கொண்டவர்களாகிய வன்னிய ரென்னும் அரசர்கள் எடுத்த வில்லானது-கொடியநெடு அவுணரை சமரில் மட்டு அற இடித்து-கொடுமையைக் கொண்ட கூட்டமாகிய இராக்ஷசர்களை யுத்தத்தில் கணக்கில்லாது கொன்று (பின்பு) எதிர் எயில் கிட்ட-(யுத்தஞ்செய்து பூமியைக் கட்டிக்கொள்ளும் பொருட்டு) பகைவர்கள் மதிலை நெருங்க (வளைத்துக் கொள்வார்களாயின் அவர்களையும்) அறுபட்டதலை நட்டுவிழ - (அவ்வியல்பைக் கண்டவுடன் தன்னிடத்து நின்றும் விடப்படும் அம்புகளால்) அறுபட்ட தலைகள் கவிழ்ந்து விழவும், நுரை கட்டிட குருதி நீர் கொட்ட (அப்படி அறுபட்ட வாயினின்றும்) நுரைக்கட்டிகள் மிகும்படி இரத்த நீர் பொழியவும், மொட்டை உடல் கெட்டு உருள்தர-(அவ்விரத்த நீர்) தலைபோன உடல்களனைவை கெட்டு உருள ஓடி, நதியிற்புக வழிவிட்டு - ஆறுகளிற்போய் விழும்படி வழிவிட்டு, உறுமி நெட்டையிடும் - பிறகு உறுமுதலோடும் தள்ளும். எ-று.

**கருத்து.** வன்னியர்கள் வில்லை எடுத்தல் யுத்தத்தில் இராக்ஷசர்களை கணக்கில்லாது கொன்று, பின்பு பகைவர்கள் வரில் அவர்களையும் எதிர்த்து, அறுத்து வீழ்த்திய முண்டங்களும் தலைகளும் இரத்த வெள்ளத்திலுருண்டோடி நதியில்

விழும்படி வழிகாட்டி. பின் உறு முதலோடேந் தள்ளும் என்பதாம். கஉ

## இதுவும் அது.

### வேறு.

குடைகொண் டெழுந்தான் மாயனெடுங் குன்றந்தனையான் குலங்களிக்கப், புடைகொண் டெழுந்து பொழிந்த பெரும் புயல்களிரிந்த வன்னியர்விற், படைகொண் டெழுந்தார் புவிசெழிக்கப் பதறியவுணர் தென்பதிக்கே, விடைகொண்டெழுந்தே யொருநாளு மீளாவகைசென் றடைந்தனரே. (கந)

(இ-ள்.) மாயன் ஆன் குலம் களிக்க நெடு குன்றந்தனை குடைகொண்டு எழுந்தான் விஷ்ணுவானவர் பசுக்கூட்டங்கள் மகிழும்படி உயர்வாகிய கோவர்த்தனகிரியை (ஒருக்கால்) குடையாகக் கொண்டெழுந்தார் (அதனால்) புடை கொண்டு எழுந்து பொழிந்த பெரும் புயல்கள் இரிந்த-கனங்கொண் டெழுந்து (மழை) பொழிந்த பெரிய மேகக்கூட்டங்கள் விலகின (அதுபோல) வன்னியர் புவிசெழிக்க வில் படை கொண்டு எழுந்தார் வன்னியர்கள் புவி செழிக்கும்படி விற்படை கொண்டெழுந்தார்கள், (அதனால்) அவுணர் விடை கொண்டு எழுந்து ஒருக்காலும் திரும்பாவகையாகவே-தென் திசை சென்று அடைந்தனர்-இயமலோகம் போய்ச் சேர்ந்தார்கள். எ-று.

**கருத்து.** வன்னியர்கள் வில்லை எடுத்தார்கள் இராக்ஷசர்கள் ஒருநாளுந்திரும்பா வகையாக எமலோகம் போய்ச் சேர்ந்தார்கள் என்பதாம்.

## வில்வளைத்தற்சிறப்பு.

வில்வளைத்தற்சிறப்பென்பது:—வில்லை வளையும்படிசெய்தலின்பேருமை. அதுவில்லைத்தாங்கியபிறகாதலின், இங்கே வில்லேந்துதற் சிறப்பிற்குப் பின்வைத்துக் கூறினார்.

## கோச்சகம்.

தனுவணங்கொண் டுலகளிப்பத் தார்வேந்த ரென வுதித்தோர், தனுவணங்கசனும் வெள்கித்தாள் வணங்கு மெழின்மிக்கோர், தனவணங்க கலவெவர்க்குந் தாய்போனன் ஞற்றும்வன்யர், தனுவணங்கத் தரியலர்க † டஞ்சமென வணங்காரோ. (கச)

(இ-ள்.) உலகு அளிப்ப-உலகத்தைக் காக்கும்படி, தார் வேந்தரெனத் தனு வணங்கொண்டு உதித்தோர் - (அக்கினியும் மற்றைய கடவு ளம்சங்களுமே) மாலையைத் தரித்த க்ஷத்திரியர்களென சொல்லப்படுகிற மானுட வடிவங் கொண்டு பிறந்தவர்களும், தன் உவன் அங்கசனும் வெள்கி தாள் வணங்கும் எழில் மிக்கோர்-தன்னிடத்து மன்மதனும் நாணிபாதத்தில் வணங்குப்படி அழகில் மிகுந்தவர்களும், தனு அணங்கு எவர்க்கும் அகல தாய்போல நன்று ஆற்று வன்யர்-யாவர்க்குஞ் சிறுமை நோயகல தாய்போல (அருள் வைத்து) மனுநேறி முறையாகக் காவல் செய்கின்றவர்களுமாகிய வன்னியர்களது, தனுவணங்க - வில்லானது வளைய, தரியலர்கள் தஞ்சம் என வணங்காரோ-பகைவர்கள் (எதிரில் வந்து எங்களை சம்மரிப்பது) எளிது (கோபித்து வில்லை வளைக்காதீர்கள்) என வணங்கமாட்டார்களோ? எ-று.

கருத்து. வன்னியர்கள் வில்வளைய பகைவர்கள் தஞ்சம் என வணங்குவார்கள் என்பதாம்.

இதில் "தார்வேந்தரெனத் தனுமணங் கொண்டு" என்றதனல் அக்கினியும், மற்ற தேவ அம்சங்களும் என்றதற்கு மனுஸ்மிருதி எ-வது அத்தியாயம் அரசன் சிறப்பு. "இந்திரன், வாயு, இயமன், சூரியன், அக்கினி, வருணன்,

† தஞ்சமென்றது—தொல்காப்பியம் இடைச் சொல்லியல் "தஞ்சக்கிளவி எண்மைப் பொருட்டே" என்னும் கஉ-வது சூத்திரத்தாலுணர்க.

சந்திரன், குபேரன் இவை களம்சங்களினுலேயே அரசனுண்டாக்கப்பட்டான் என்னும் ௬-வது சுலோகத்தாலும் "இப்படிக்கொத்த, தேவர்களின் அம்சமாகையால் அரசன் சகல மனிதர்களைவிட அதிக காந்தியுள்ளவனும், அனைவரையும் ஆளத்தக்க வீரியமுள்ளவனும் இருக்கிருன்" என்னும் ௫வது சுலோகத்தாலும் "இந்த வரசன் சூரியன் போல் தன்னைப் பார்க்கிறவன் கண்களையும், மனதையும் தகிக்கிறபடியால் பூமியிலொருவரும் அவனுக்கெதிராக நின்று பார்க்கக் கூடாதவராக யிருக்கிருர்கள்" என்னும் ௬வது சுலோகத்தாலும் "இவ்வரசன் தன் மகிமையினுல் சமயத்துக்குத் தக்கபடி அக்கினியாகவும்; வாயுவாகவும் சூரியனுகவும், சந்திரனுகவும், இயமனுகவும் குபேரனுகவும், வருணனுகவும், தேவேந்திரனுகவும் இருப்பான்" என்னும் எ-வது சுலோகத்தாலும், ஷை ஸ்மிருதி க-வது அத்தியாயம் "இந்திரன், சூரியன், வாயு, இயமன், வருணன் சந்திரன், அக்கினி, பிரிதிவி இவர்களினுடைய நடையை அனுசரித்து அரசன் நடக்கவேண்டும்" என்னும் ௩0௩-வது சுலோகத்தாலும்." ஆவணி முதல் நாலு மாதம் வரையில் இந்திரன் மழையை உண்டுபண்ணி சந்தோஷப்படுத்துகிறதுபோல் அரசன் தன் இராஜ்ஜியத்திலிருக்கிற பிரஜைகளுக்கு அபீஷ்டத்தை உண்டுபண்ணுகிறது இந்திரன் "விரதம் என்னும் ௩0௪-வது சுலோகத்தாலும் சூரியன் மார்கழிமாத முதல் எட்டுமாதம் வரையில் தன்னுடைய கிரணங்களாலே அதிமாகத் தபியாமல் பூமியிலிருக்கிற ஜலத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக இழுக்கிறதுபோல் அரசன் சனங்களை உபத்திரவப்படுத்தாமல் மாதந்தோறும் சிறிது கிறிதாக தீர்வை வாங்குவது சூரியவிரதம்" என்னும் ௩0௫-வது சுலோகத்தாலும், "வாயு சகல ஜந்துக்களிடத்திலும் பிராண ரூபமாய் உள்ளே நுழைந்து சஞ்சரிக்கிறதுபோல் அரசன் வேவுகாரர்களால் எதிரியின் பட்டணத்தில் பிரவேசித்திருப்பது வாயுவின்விரதம்" என்னும் ௩0௬ வது சுலோகத்தாலும், "இயமன் தண்டனை காலத்தில் மித்திரனென்றும், சத்துருவென்றும் பேதமின்றி யாவரையும் சரியாக சிக்ஷி

க்கிறது போல் அரசன் குற்றம் செய்த பிரஜைகளை பக்ஷபாத கமில்லாமல் சரியாகத்தண்டிப்பது இயமன் விரதம்" ௩௦எ-வது சுலோகத்தாலும், "வருணன் தன்னால் தண்டிக்கத்தக்க வர்களான பாபஞ்செய்த பிரஜைகளை பாசங்களால் யோசனை யின்றி கட்டுகிறதுபோல் அரசன் பாபிகளை தயை யில்லாமல் தண்டிக்கிறது வருணன் விரதம்" என்னும் ௩௦அ-வது சுலோகத்தாலும் பூரணசந்திரனைப்பார்த்து மனிதர்கள் சந்தோஷப் படுகிறதுபோல், அரசன் தன்னை பார்த்து மந்திரி முதலிய பரிசனங்கள் சந்தோஷிக்கும்படி செய்வது சந்திரன் விரதம்" என்னும் ௩௦௯-வது சுலோகத்தாலும், "அரசன் அக்கினிபோல சோம்பலில்லாமல் பிரதாபமுள்ளவனாய்த் துஷ்டர்களையும் அபகாரஞ் செய்தவர்களையும் சிக்ஷித்துக் கொண்டிருப்பது அக்கினிவிரதம்" என்னும் ௩௧௦-வது சுலோகத்தாலும் பூமியானஜங்கம ஸ்தாவர ரூபமான சகல பிராணிகளையும் உயர்வு தாழ்வில்லாமல்சரியாய்த் தரிக்கிறதுபோல அரசன் சாதாரணமாய் பண்டித பாமர பேத மின்றி அனைவரையும் காப்பாற்றுவது பிரிதிவி விரதம்" என்னும் ௩௧௧-வது சுலோகத்தாலும், "இந்த உபாயங்களாலும் அந்தந்த காலத்துக்கு தக்கபடி தனக்கு தோற்றுகிற மற்றுமுள்ள உபாயங்களாலும் அரசன் தன் தேயத்தில் வாசஞ் செய்துகொண்டிருக்கிற திருடர்களையும் அயலான் தேசத்தில் வாசஞ்செய்துகொண்டு தன்தேசத்திற் திருடுகிற திருடர்களையும் தண்டித்து அடக்குக "என்னும் ௩௧௨-வது சுலோகத்தாலும் அறிக. அன்றியும் இக்ஷ்வாகுவம்சத்தில் விஷ்ணுவே இராமனாகவும், புரூரவாவம்சத்தில் கிருஷ்ணனாகவும், பலராமனாகவும், மதுரை பாண்டியன் வம்சத்தில் தடாதகைப் பிராட்டியாராக பார்வதியும் சிவபெருமான் சௌந்தர பாண்டியனாகவும் சுப்ரமண்யர் உக்ர குமார பாண்டியனாகவும், அக்கினி உருத்திரவன்னிய மகாராஜனாகவும் போந்த சரித்திரங்களாலு முணர்க.

தன் + உவண்—தனுவன். என்றது தொகுத்தல் விகாரம்.

## நாணேற்றுதற் சிறப்பு

நாணேற்றுதற் சிறப்பென்பது:— நாணியை வில்லினிடத்துப் பூட்டுதலின் பெருமை. அது வில்லை வளைத்த பிறகே யாதலின், இங்கே வில் வளைத்தற் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

ஓங்குபுகழ் வன்னிமன்ன ரொன்னலார் தமைப்பு
றங்கண் டுலகங் காக்கத், தாங்குவரிச் சிலைவணக்கிச்
சரோருகக்கை யாற்றீண்டித் தனிநாண்பூட்டப், பாங்கு
றுமூ வுலகினரும் பைங்கழைத் தோண் மடநல்லார்
பசும்பொன் வண்ணப், பூங்கமுகின்மங் கலநாண் பூட்டு
தல்போன் மெய்ப்புளகம் போர்ப்பர்மன்னோ. (கரு)

(இ-ள்) ஒங்கு புகழ் வன்னி மன்னர் - உயர்ந்த கீர்த்தியைக்கொண்ட வன்னிய அரசர்கள்-ஒன்னலார் தமைப் புறங் கண்டு-பகைவர்களை முதுகுகாட்டச் செய்து,உலகம்காக்க-உலகத்தைக்காக்கும் பொருட்டு, வரிதாங்கு சிலை சரோருகக் கையாற்றீண்டி வணக்கி- இடைக்கட்டுகளையுடைய வில்லை மலர் போலும் கையினால் பற்றி வளைத்து.தனி நாண்பூட்ட-ஒப்பற்ற நாணியேற்ற,பாங்கு உறு மூவுலகின் -பகுப்பினைக்கொண்ட மூன்று உலகினும், (வசிக்கின்றவர்கள்), நறும் பைம் கழைத் தோள் மடநல்லார் - நன்மையாகிய பசிய மூங்கில்போலும் தோள்களை யுடைய இளம்பருவப் பெண்களது,பசும் பொன் வண்ணப் பூம் கமுகில் மங்கலநாண் பூட்டுதல்போல்-பசும் பொன்னிறம் வாய்ந்த அழகியகழுத்தில் தாலிக்கயிற்றைச் சேர்ப்பதுபோல,மெய்ப்புளகம் போர்ப்பர்-சரீரம் புளகித்து மகிழ்வார். எ-று.

கமுகு ஆகுபெயர். மன்-ஒ-அசைகள்.

கருத்து வன்னியர்கள் வில்லில் நாணியைப்பூட்டமூன்றுலகத்தவர்களும் மாங்கல்ய தாரணகாலம் போலும் மகிழ்வார்கள் என்பதாம்.

## குணத்தோனிச்சிறப்பு.

குணத்தொனிச் சிறப்பென்பது-வின்ஞணியைப் பிருவ நியத் தெறிப்பதாலாகிய ஓசையின் பெருமை. அது நாணியைப் பூட்டியபிறகு ஆதலின், இங்கே நாணேற்றுதற்சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

### எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நெடியதிரை யெழுகடலி ஞெலியுமழை முகிலொலியு நிகழும்யுக முடிவின் முடுகும், ஒடிவில்பெருவளியொலியு முருமொலியு மிணையிலெனவுரகர்விழி பிதிர வெருவிக், கொடியதிதுகொடியதென விபுதர்நிலைகெட வவுணர் குடர்குலைய வடர் திசையுடன், படியதிரவனியர்சிலை தழுவுகுண வொலியினிலை பகர்வதெவ னரிதரிதரோ. (௧௬)

(இ - ள்.) நெடிய திரை எழுகடலின் ஒலியும் - நீண்ட எழு சமுத்திரங்களின் சத்தமும், மழை முகில் ஒலியும் - துளிகளைக்கொண்ட மேகர்ச்சனையும், நிகழும் யுகமுடிவில் முடுகும் ஒடிவுஇல் பெருவளி ஒலியும், நடக்கின்றயுகாந்தத்தில் மோதுகின்றதளாதலிலாத பிரசண்டமாருதத்தி னதிர்ப்பும், உரும் ஒலியும்- இடியின் முழக்கமும், இணைஇல் என வெருவி ஒப்பில்லை யென்பதாகப் பயந்து, உரகர் விழி பிதிர - நாகலோகத்தவர்களுக்கு விழிபிதுங்கவும், இது கொடியது இது கொடியது என விபுதர் நிலை கெட - இது கொடியது இது கொடியது என தேவர்களுக்குத் (தங்கள் தங்கள்) நிலை கெடவும் அவுணர்குடர் குலைய - இராக்ஷதர்களுக்கு (வயிற்றைப் பிசைவதால் தனிதனி நிலைகெட்டு) குடலை அடுக்குக் குலையவும், அடர்திசையுடன் படியதிர - நெருங்கிய திக்குகளோடும் பூமி யதிரவும், (செய்யும் ஆகையால்) வனியர் தழுவு சிலை குணத்தொனியினிலை - வன்னியர்கள் கையிற் றழுவிய விற்குணத்தொனியினிலையை எவன் பகர்வது-எப்படிச்சொல்வது அரிது அரிது - அருமை! அருமை! எ-று. அரோ அசை.

கருத்து. வன்னியர்கள் - தரிக்கும் வில்லின் குணத் தொனிக்கு ஏழு சமுத்திர சத்தமும், மேகத்தினது சத்தமும், இடி முழக்கமும் பிரசண்டமாருத அதிர்ப்பும், ஒவ்வா, தென நாகலோகத்தவர்களுக்கு விழி பிதுங்கவும், தேவர்களுக்கு தங்கள் தங்கள் நிலை கெடவும், இராக்ஷதர்களுக்கு குடர் அடுக்கு குலையவும், திக்குகளோடு பூமி அதிரவுஞ்செய்யுமாதலால் அதன் பெருமை சொல்வது அருமை அருமை என்பதாம்.

## அம்பறாத்தூணிச்சிறப்பு

அம்பறாத்தூணிச் சிறப்பென்பது:—அம்ப அறாத கூட்டின் பெருமை. அது விற்குணத்தொனி யறிந்தே பிறகு கருதுதலின் இங்கே விற்குணத்தொனிச்சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

## கோச்சகம்.

உம்பர்யா மென்றிறுமாந் துறைவதுண்டவ் வமரர்கள்யாங், கம்பரா மென்றேத்தக் கவியரசாய் வாழ்வதுமுண், டிம்பரா ருஞ்சொல்வன்ய ரேலாருக் கிடரிழைக்கு, மம்பறாத் தூணியுண்டே லாவியங்கத் தெவர்க்குமுண்டே.

(இ - ள்.) இம்பர் யாருஞ்சொல் வன்னியர் - இவ்வுலகத்தில் யாவரும் சொல்லுகின்ற வன்னியர்களது, எலாருக்கு இடர் இழைக்கும் அம்பு அறாத்தூணி உண்டேல் பகைவர்களுக்குத் துன்பத்தைச் செய்யும் அம்பறாத்தூணி யிருக்குமேயானால் - அவ் அமரர்கள் யாம் உம்பர் என்று இறுமாந்து உறைவது, அத்தேவர்கள் நாம் உயர்ந்த பதவியையுடையேம் என்று எண்ணி கருவித்திருப்பதுண்டு; யாம் கம்பர் என்றேத்தக் கவியரசாய் வாழ்வது முண்டு - யாமும் கம்பர் என்று யாவரும் புகழக் கவிராஜனாக வாழ்வதும் உண்டு; எவர்க்கும் ஆவி அங்கத்து உண்டு, (இவையன்றி மற்றையோர்)

யாவர்க்கும் - உயிர் அங்கத்தினிடத்து உண்டு. எ - று. ஆம் ஏ - அசைகள்.

**கருத்து.** வன்னியர்களது அம்பறாத்தூணி யிருப்பதால் தேவர்கள் செருக்கியிருப்பதும், யாம் கம்பரென உலகப் பிரசித்த கவிராஜனாக விருப்பதும் ஆன்மகோடிகள் உயிரோடிருப்பதும் உண்டு என்பதாம்.

இதில். இராக்ஷதர்கள் அடியோடுங்கெட்டதால் "உம்பர் யாமென்றிறுமாந் துறைவதுண்டவ் வமரர்கள்" என்றும் தமிழ் வேந்தர் மூவராலும் நிலம் யானை குதிரை தண்டிகை முதலியனவைகள் கொடுத்து அனுசரித்த தோடும் தமக்குக் கொடுத்த யானை குதிரைகள் பயிர்களை யழித்துவிடும் நிலங்களுக்கு வரி நீக்கிக் கொடுத்தலையும் மறவே மென்பார் "யாம் கம்பராமென்றேத்தக் கவியரசராய் வாழ்வதுண்டு" என்றும் கூறினரென்க.

## பிரமாத்திரச் சிறப்பு.

பிரமாத்திரச் சிறப்பென்பது:—பிரமாவினிடத்துப் பெறும் அத்திரத்தின் பெருமை. அது அப்பறாத்தூணிக்குள் இனத்தோடு தங்குதலின், இங்கே அம்பறாத்தூணிச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

### அறுசீர்க்கழிநெடி லடியாசிரிய விருத்தம்.

வரமிகு வன்னியர்வணங்கா முடியரசர் வண்மை தனை வரையவேண்டிற், சிரமகுட மன்னவராய்ப் பற் பலதே யங்களினுந் திகழ்வோர் தம்முள், விரவலரைப் பொன்னிலத்து மித்திரை யிந்நிலத்தும் வீறிவாழ்வான், பிரமசிரத் தானிறுவும் பெற்றிமைகண் டாய்ந்தெவர் தாம் பேசற்பாற்றே.

(இ-ள்.) வணங்காமுடி மிகுவர வன்னியர் அசரர் - வணங்கா முடியோராகிய அதி மேன்மையைக் கொண்ட

வன்னியர் என்னும் அரசர்கள், சிரமகுட மன்னவராய் பல பல தேயங்களினும் திகழ்வோர்தம் உள் - தலையில் கிரீடந் தரித்த அரசர்களாக பலபல தேயங்களினும் விளங்குவோர்க்குள், விரவலரைப் பொன்னிலத்தும் - பகைவர்களை தேவவுலகத்தும் மித்தரரை இன்னிலத்தும் - நண்பர்களை இவ்வுலகத்தும், வீறிவாழ்வான் - விளங்கிவாழும் பொருட்டு பிரமசிரத்தால் நிறுவும் வண்மைதனை வரையவேண்டில் - பிரமாத்திரத்தினாலே நிலைக்கச் செய்யும் வலியின் பெருமையை எழுதிச்சொல்லப் புகுந்தால், பெற்றிமை கண்டு எவர் ஆய்ந்து பேசற்பாற்று - அப்பெருமையைக்கண்டு எவர் ஆராய்ந்துசொல்லும் பான்மையினை யுடையது. எ-து-வ-அசை.

பிரம அத்திரம் - பிரமாத்திரம். - அது பிரமாச்சிரமென தகரத்துக்குச் சகரம் போலியாகி பிரமசிரமென இடை குறைந்து நின்றது.

**கருத்து.** வன்னியர்கள் பிரமாத்திரம் பகைவர்களைத் தேவவுலகத்தும், சிநேகர்களை இவ்வுலகத்தும், நிலைக்கச் செய்யுமென்பதாம்.

இதில் இவர்கள் சக்கிரவர்த்திகளாதலின் - வரமிகு வன்னியர் வணங்காமுடியரசர் என்றார் அதனை சஉ - வது கவியினுரையில் காண்க.

## நாராயணாத்திரச் சிறப்பு.

நாராயணாத்திரச் சிறப்பென்பது:—நாராயணனிடத்துப் பெறும் அத்திரத்தின் பெருமை. அது பிரமாத்திரத்தினுஞ் சிறத்தலின், இங்கே பிரமாத்திரச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினார்.

காரியானுங் கரதலவன் னிய்வீர ரடுசமரிற் கனன்
றேயுய்க்கும், பெரியனா ராயணாத் திரத்தினுக்கிந் திரா
திபிர மாதியோரும், நேரியல வுட்குவரே யியாவரெதிர்
வாழ்த்தியகை நின்றுகாழ்வோர், பாரியர்மங் கலநாண்
பன் னாளுநிலை பெறவாம்பா விக்குமம்மா.

(இ-ள்.) கார் இயலும் காதல வன்னிய வீரர் மேகத்தைப்போல் (இரப்பவர்களுக்கு வரும் பிரயோசனத்தை விரும்பாது) கொடுக்கும் கைகளையுடைய வன்னிய வீரர்கள், அடுசமரில் கனன்று உய்க்கும், - (எதிர்த்த பகைவர்களைக்) கொல்லும்படி யுத்தகளத்தில் கோபித்துச் செலுத்தும், பேர் இயல் நாராயணாத்திரத்தினுக்கு - பெருமையுடைய நாராயணாத்திரத்தினுக்கு, நேர் இயல இந்திராதி பிரமாதி யோரும் உட்குவரேல் - எதிரில் வர இந்திரன் பிரமா முதலியோர்களும் அஞ்சுவார்களேயானால், எதிர்யாவர் -(வேறே) எதிர்ப்பவர்கள் எவர் (ஒருவரு மில்லையாதலால்) நின்று அதை வாழ்த்தி தாழ்வோர் பாரியர் - (எதிர்) நின்று அதைத் துதித்து வணங்கு கின்றவர் களின் பாரியகளது, மங்கல நாண் பல்நாளும் நிலைபெற வரம்பாலிக்கும் - தாலிக்கயிறு எப்போதும் நிலைத்திருக்கும்படி வரங்கொடுக்கும் எ-று. அம்மா-அசை

**கருத்து.** வன்னியர்களின் நாராயணாத்திரம் தன்னை வணங்குபவர்களின் பாரியர் தாலிக்கயிறு பலநாளும் நிலைத்திருக்கும்படி வரங்கொடுக்கும் என்பதாம்.

இதில். இவர்கள் கொடைவளத்தையும் வள்ளறன்மையையும் உடையவர்களாதலின் "காரியலுங் காதல வன்னிய வீரர் என்றார். இவைகளை ௬௦, ௬௧-வது கவிகளிற்காண்க.

## பாசுபதாத்திரச் சிறப்பு

பாசுபதாத்திரச் சிறப்பென்பது:—பசுபதியினிடத்துப் பெறும் அத்திரத்தின் பெருமை. அது நாராயணாத்திரத்தினுஞ்சிறத்தலின், இங்கே நாராயணாத்திரச் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

### கோச்சகம்.

உருத்திரவின் வயங்குதிங்க ளுதயனெதி ரொளிர்
தரும்கொல், உருத்திரனும் | வயிரவரை யுறழ்தோளார்
வன்னிமன்னர், உருத்திரத மிவர்ந்திகலோ ருரஞ்

சாய்ப்பத் தொடுக்குமழ லுருத்திரவன் படைக்குமற்ற
வும்பர்படை யொப்பாமோ. (உ0)

(இ-ள்.) உருத்து இரவின் மயங்கு திங்கள் உதயன் எதிர் ஒளிர்தருங்கொல் - உதித்து இரவின் கண் விளங்கா நின்ற சந்திரன் சூரியனுக்கு முன் பிரகாசத்தையடையுமா? (அது போல்) வயிரம வரை உறழ்திறளும் உருதோளார் வன்னி மன்னர் - வயிரமலைபோலும் திரண்ட வடிவினைக்கொண்ட தோளினை யுடையோராகிய வன்னியரென்னும் அரசர்கள், உருத்து இரதம் இவர்ந்து இகலோர் உரஞ்சாய்ப்பதொடுக்கும் - கோபித்து இரதத்திலேறிச் செலுத்திப் பகைவர்களது உடலைப் பூமியில் வீழ்த்தும்படித் தொடுக்கும், அழல் வன் உருத்திர படைக்கு - அக்கினியைக் கக்காநின்ற வலிமை யையுடைய பாசுபதாத்திரத்துக்கு, மற்ற உம்பர் படை ஒப்பு ஆமோ - மற்றையதேவர்கள் படைகள் ஒப்பாகுமா? எ-று.

கருத்து. வன்னியர்களது பாசுபதாத்திரம் தேவர் படைகள் யாவற்றினுஞ் சிறந்தது என்பதாம்.

இதில் மற்ற வும்பர் யென்றதனல் இந்திராஸ்திரம், அக்கினியாஸ்திரம், வருணஸ்திரம், வாயுவாஸ்திரம், குபேராஸ்திரம், கந்தர்வாஸ்திரம், பர்வதாஸ்திர முதலியவைகளை யென்க.

## அபிமந்திரித்தற் சிறப்பு.

அபிமந்திரித்தற் சிறப்பென்பது:— அம்புகளில் மந்திர வுரு வேற்றுதலின் பெருமை. அது அம்புகளைப் பிரயோகம் செய்யும்பொழுது அமைதலின், இங்கே அத்திரங்களின் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

### அறுசீர்க்கழிநெடி லடியாசிரிய விருத்தம்.

அக்கரமொன் றக்கரமூன் றக்கரமைந் தக்கரமெட்
டாதியாய, எக்கடவுண் மந்திரமு மெண்ணிலுருச் செ

**பித்துநினை வெய்தினோரும், மிக்கதிது வெனவிபப்ப விறல்வன்ய குலவரசர் விடுங்கோல்சென்று, தக்கவபி மந்திரமாட் சியினமர்வென் றிறைவனிடஞ் சார்தலாலே.**

(இ-ள்.) விறல் வனியகுல அரசர் - விஜயத்தைக் கொண்ட வன்னியகுல வரசர்கள், தக்க அபிமந்திரமாக்ஷியின் (அள்வுக்குத்) தக்கதாக அபிமந்திரித்தலின் வல்லமையால், விடும்கோல் - விடப்பட்டபாணமானது - சென்று அமர் வென்று இறைவனிடம் சார்தலால், போய்ப் பகையைச் சயித்து அரசனிடத்திலேயே வந்து அடைகிறபடியால், அக்கரம் ஒன்று அக்கரம் மூன்று அக்கரம் ஐந்து அக்கரம் எட்டு ஆகிஆய - ஏகாக்ஷரம், திரியாக்ஷரம், பஞ்சாக்ஷரம் அட்டாக்ஷர முதலாகிய, எவ் கடவுள் மந்திரமும் - எவ்வகைக் கடவுள் மந்திரங்களையும், உரு எண் இல் சபித்து நினைவு எய்தினோரும் - உரு கணக்கில்லாது சபித்து பயனடைந்தோர்களும், இது மிக்கது என வியப்ப - இம்மந்திரம் விசேடமுடையதென ஆச்சரியமடைவர்கள். எ-று.

**கருத்து.** வன்னியர்கள் அபிமந்திரித்தல் மந்திரங்களெல்லா வற்றினுஞ் சிறந்ததாகின்றது என்பதாம்

இதில் "ஆதியாய் எக்கடவுண் மந்திரமும்" எனறதனல் சடாக்ஷரம், துவாதசாக்ஷரம், சோடசாக்ஷரம், சதுர்விமதியக்ஷர முதலியவைகளுங்கொள்க. உக

## நாணிறங்குதற் சிறப்பு.

நாணிறங்குதற் சிறப்பென்பது:—வில்லினின்றும் நாணிறங்குதலின் பெருமை அபிமந்திரித்தலால் அம்புகள் பிரயோகமாகி ஜயமடைந்த பிறகு வில்லினின்றும் பிரிவுறுதலாதலின் இங்கே அபிமந்திரித்தற் சிறப்புக்குப்பின் வைத்து கூறினர்.

**பூதலத்தோர்க் கிடரியற்று மாக்கருடல் பிளந்து வெற்றிப் புனைந்தவோலே, மீதலத்தோர்க் குணாவிடுத்**

தவர்பயந்தீர்த் தரக்கியர்கள் வெரீ இத்தோடோய்ந்த,
காதலருக் கழுதரற்றிக் கழுத்திலகு மங்கல நாண் கழித்
ததற்பின், தாதலர்தா ரணிவனியர் தனிச்சிலைநாண்
களித்திறங்கித் தயங்குமாதோ.

(இ-ள்.) தாது அலர் தார் அணி வனியர் தனிச்சிலை நாண் - வாசனை தங்கிய மலர் மாலையை யணிந்த வன்னியர்களின் ஒப்பற்ற விண்ணாணியானது, பூதலத்தோர்க்கு இடர் இயற்றும் அரக்கர் உடல் பிளந்து - பூவுலகத்தவர்க்குத் துன்பத்தைச் செய்யாநின்ற இராக்ஷதர்களுடைய சரீரத்தைப் பிளந்து, வெற்றிபுனைந்து - ஜயமடைந்து, அ ஓலை மீதலத்தோர்க்கு உணரவிடுத்து - அச்சய வோலையைத் தேவவுலகத்தவர்கள் அறியும்படி யனுப்பி, அவர்பயம் தீர்த்து - அவர்கள் கொண்டிருந்த பயத்தைத்தீர்த்து - அரக்கியர்கள் - இராக்ஷத ஸ்திரீகள், வெரீ இத் தோள் தோய்ந்த காதலருக்கு அழுது அரற்றி - பயந்து தங்கன் (தங்கள்) தோளிற்சேர்ந்து (இன்பத்தைக்கொடுத்த) கணவர்களுக்குக் கதறி யழுது - கழுத்து இலகு மங்கல - நாண் கழித்ததற்பின், கழுத்தில் விளங்கிய தாலிக்கயிற்றை அறுத்தபிறகு, களித்து இறங்கித் தயங்கும் - மகிழ்ந்து (வில்லினின்றும்) இறங்கித் தங்குவதாகும். எ-று: மாதோ - அசை.

கருத்து. வன்னியர்களின் விண்ணாணியானது இராக்ஷதர்களைச் சயித்து, ஜயமடைந்து, அச் சமயவோலை தேவர்கள் அறியும்படிச் செய்து அவர்கள் பயத்தைத்தீர்த்து, இராக்ஷத ஸ்திரிகளின் தாலிக்கயி றறுத்தாலன்றி யிறங்காதென்பதாம்.

இதுவரையில் கூறியவைகள் விற்சிறப்பென்க. இனி வாட்சிறப்பு கூறினாராயினர்.

## வாள்.

வாளென்பது: - கடகம் அதாவது கத்தி: வீரபட்டய மெனினும் ஆம். அது வில்லோடும் சமம்நோக்கிப் பின் வைத்து கூறினர்.

### வீரவாட்சிறப்பு.

வீரவாட் சிறப்பென்பது - வீரபட்டயத்தின் பெருமை. அது விற்சமரே யன்றி வாட்சமருங் கொள்வாமெனக் கருதுங்கால் அமைதன் இங்கே நாணிறங்குதற் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

### கோச்சகம்.

விண்ணவர்க்கு விருந்தினராய் மேவியரமாதரின்பம்
மண்ணின்மரு வலர்மருவ வாழ்விக்கும் பண்ணுடர்
திண்ணமுறு வன்னிமன்னர் திருக்காத்தி லேந்தியமர்
நண்ணும்வய வாண்மகிமை நாமெங்ஙனவில்வதுவே. ()

(இ-ள்.) பண்ணுடர் திண்ணம் உறும் வன்னிமன்னர் - தமிழ்நாட ரென்னும் (சேர சோழ பாண்டியர்க ளாகிய பலத்தை யுடைய வன்னிய வரசர்களது - திருக்காத்தில் ஏந்தி அமர் நண்ணு வயவாள் - அழகிய கையினிடத்துப் பொருந்தி யுத்தத்தைச் செய்யும் வீரவாளானது, மண்ணின் மருவலர் விண்ணவர்க்கு விருந்தினராய் மேவி - பூவுலகி லுள்ள பகைவர்கள் தேவவுலகத் தவர்களுக்கு விருந்தினராகப் பொருந்தி, அரமாதர் இன்பமருவ வாழ்விக்கும் - அரம்பைமுதலிய தெய்வப் பெண்களோடும் இன்பத்தை யனுபவிக்கும் படியான் உயர்ந்த வாழ்வைக் கொடுக்கும், (ஆகையால்) - மகிமை நாம் எங்ஙன நவில்வது - (அவ்வீரவாளின்) சிறப்பை நாம் எவ்விதத்திற் சொல்வது. எ-று.

கருத்து: - வன்னியர்கள்வீரவாள் பகைவர்களைத் தேவர்களுக்கு விருந்தாளிகளாய் அரம்பை முதலிய தேவஸ்திரீகளின் போகங்களை யனுபவிக்கச் செய்யும் என்பதாம்.

இதில் பகைவர்களுக்கும் இழிவைத் தராது உயர்வை யே கொடுக்கும் என்றதனால் இதை "முனிவினும் நலகுவர் மூதறிஞருள்ளக் கனிவினும் நல்கார் கயவர், நனிவிளைவாற தாயினு மாகுங் கதலிதா னெட்டிபழுத - தாயினு மாமோ வறை" என்னும் சிவப்பிரகாசர் வாக்காலுணர்க.

வாட்சிறப்பு கூறினவர் இனி வேற்சிறப்பு கூறினாரா யினர்.

## வேல்.

வேலென்பது - வாளோடும் ஒற்றுமையுடையது. அது இனம் நோக்கி வாளின் பின்வைத்து கூறினர்.

### வேலேந்தியகாலாட்படைச் சிறப்பு.

வேலேந்திய காலாட்படைச் சிறப்பென்பது: - வேலா யுதத்தைத் தாங்கிய காலாட்படையின் பெருமை. அது வா ளோடுவேல் இன மாதலின் இங்கே வீரவாட் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

**செய்யகத்து வளநாடு தேர்புலவர் கினிதளிப்பார்,**
**மெய்யகத்து வன்னியர்செவ் வேள்பலவா முருக்கொ**
**ளல்போல், கையகத்து வேலேந்து காலாளின் படை**
**யினன்றி, வையகத்துமருவுகலி மற்றொன்று லகலாவே.**

(இ-ள்.) செய் அகத்து வளநாடு தேர் - வயல்வளத் தைக்கொண்ட நாடு தேர் முதலியவைகளையும், புலவர்க்கு இனிது அளிப்பார் வன்னியர் - தம்மையடைந்த வித்வான் களுக்கு இனிமையோடுங் கொடுக்கின்றவர்களாகிய வன்னி யரென்னும் அரசர்களது, செவ்வேள் மெய் அகத்து பல வாம் உருகொளல்போல் - ஸ்ரீசுப்பிரமணியக் கடவுள் தமது சரீரத்தினிடத்தி னின்றும் (அவ்வுருவாகப்) பல உருவங்கள் கொண்டு வருதல் போல், (வருகின்ற) வேல் ஏந்துகாலா ளின் படையின் அன்றி - வேல் ஏந்திய காலாளின்படையினை

லல்லது - வையகத்து மருவு கலி மற்று ஒன்றால் அகலா-இவ் வுலகத்துப் பொருந்தும் அதருமமானது வேறு ஒருவழியினு லும் நீங்காது. எ-று.

கருத்து: - வன்னியர்களது காலாளின் படைகளினுல் உலகத்தி லுண்டாகும் அதருமம் நீங்கி வருகின்றது என்ப தாம்.

இதில் காலாட்படையைச் சேர்த்துக் கூறிய தென்னே யோவெனின்? அறுவகைத் தானேயோடும் நால்வகைச் சேனே யையும் தொகுத்துக் கூறல்வேண்டு மென்பார் கூறினரெனவு ணர்க. இதை மகாபாரதம்சாந்திபருவம் அரசநீதிச் சருக்கம்.

"கொடிஞ்சி மான்றேரக்கிம்புரிக் கூர்ங் கோட்டுவேழங் கதிப் பாய்மா, நடஞ் செய்தமரென்னலு மகிழ களிகான் மள்ளர் நாற்படையா, மிடைந்த வில் வேல் வாண் மூன்றாய் விதித்துக் காலாட்களே முன்னர்ப், படிந்த மூன்றுவகை கூட்டிப் பகர்வராரும் படையென்றே"

என்னும் அ - வது பாடலாற் காண்க. நால்வகைச் சேனே யாவது - யானே குதிரை தேர்காலாள் என்பன இதை. தி, கஉ -'வதி. "சதுரங்கம்யானேதேர் குதிரை காலாள்" என் னும் - நரு - வ, சூ-க, இன்னும் வேலேந்திய காலாட்படை யென்றதனுல்; குந்தம் சூலம், ஈட்டி, உலக்கை, தோமரம், வச்சிர முதலியவைகள் எந்தும் காலாட் படைகளேயும் கொள்க.

"செய்யகத்துவளா நாடு தேர் புலவர்க் கினிதளிப்பார்" என்றதற்கு-மதுரையில் குலசேகர பாண்டியன் அரசு புரிந்த காலத்து ஷைபாண்டியன் தன்மேல் பாமாலே தொடுத்து வந்த இடைக்காடனே அவமதித்த காரணத்தால் சோமசுந் தரக்கடவுள் வருத்தமடையக் கண்டபாண்டியன்ஷைகாடனே வருவித்து சர்வமரியாதை யோடும் பாமாலே கேட்டு "அறிவு டைக் காடனுக்கு மருமை மான்புலமை யோர்க்கும் - முறை

மையா லாரந்தூசு முகிழ்முலைக் கொடியினன்னூர் - நிறை நிதி வேழம்பாய்மான் விளைநில நிறம்ப நல்கி - யறைகழற் காளிற் பின்னேபூடி நடந்திதனை வேண்டும்"

என்னும் திருவிளையாடல் இடைக் காடன் பிணக்கு தீர்த்தபடலம்-௩௪-வது கவியிற் காண்க. இன்னும் "புலவர்க் கினி தளிப்பார்"என்றதனால் முதலிடைகடை யென மூன்று சங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டன முதலியவைகளும் கொள்க.

வேற்சிறப்பு கூறினவர் இனி யானைச்சிறப்பு கூறினாா யினர்.

## யானை.

---

யானையென்பது: யுத்தத் தேற்சியை யுடைய யானையை அது காலாட்படை யோடும் ஒற்றுமை நோக்கிப் பின்வைத்து கூறினர்.

### யானைப்படைச்சிறப்பு.

யானைப்படைச் சிறப்பென்பது - யானைப்படையின் பெருமை. அது வேலேந்திய காலாட்படைக்குப் பலந்தருதலின் இங்கே வேலேந்திய காலாட்படைக்குப் பின்வைத்து கூறினர்.

ஓரானை முகத்தானை யுலகத்தோர் முன்னிறுத்திப்,
போரான கருமமெலாம் பிறழாது முற்றுகிற்பார், காரா
ன வுடலவுணர் கலங்குறமுன் னிறுத்திவன்யர், போரா
னைப் படையானே போர்வயங்கோ டலினன்றே. (௨௫)

(இ-ள்.) வன்னியர்கள் - வன்னியர்களானவர்கள், கோர் ஆன உடல்அவுணர் கலங்குற முன்னிறுத்தி-கறுத்த உடலினை யுடையவர்களாகிய இராக்ஷதர்கள் கலங்கும்படி முனையில் நிறுத்தி போர் ஆனைப் படையானே - பொரும் யானைப் படையினாலே, போர்வயம் கோடலின் அன்றே - யுத்தத்தில் ஜயத்தை யடைகிற படியினா லல்லவா, (அக்காட்சியைக்

காணுகின்ற) உலகத்தோர் - உலகத்தவர்களும், (அவ்வங்கள் தமக்கில்லை யாதலால் தங்களுக்கு அவ்வியானை கிடைப்பது அருமையென எண்ண) ஓர் ஆனை முகத்தானை முன் இறுத்தி - (அவ்வியானைகளுள் ஒன்றினது) ஒரு உறுப்பைக் கொண்ட விநாயகனை முதலில் வைத்து. (வணங்கி) பேர் ஆண கருமம் எல்லாம் பிறழாது முற்றுகிற்பார் - பெரிய செயல்களை யெல்லாந் தவறாது முடித்துக் கொள்கிறார்கள் எ-று,

**கருத்து.** - வன்னியர்கள் யானைப்படையைக் கொண்டு ஜயமடைதலைக் கண்டே உலகத்தவர்களும் யானைமுகத்தினையுடைய விநாயகனைப் பூசித்து பயன் அடைகிறார்கள் என்பதாம்.

இதில் - அரசுவா வாதலின் இங்ஙனமமைத்த தென்க. அரசுவா என்னை? தி - கஉ - வ - தி "காலோர் நான்குந் தனிக்கையுங் கோசமும் - வாலுறுப் போடேழு மாநிலந் தோய்ந்து - பாலுஞ்சங்கும் போலுங் காலுகிறது - காலினு ஞான்ற வொருதனிக் கையினும் - வாயினும் வாலினும் மருப்பினுங் கோறல் - வல்லது பதின்மூன்று முழசுற்றுடைத்தாகி - எழு முழ முயர்ந் தொன்பது முழ நீண்டது - தீயுமிழ் சிறு கண்ணுஞ் செம்புகருமுடைத்தாய் முன்புயர்ந்து பின் றணிந்த தாயின் - அவ்வியல யானையை யரசவா வென்ப" என்னும் கககூ - வ - சூ - க.

யானைச் சிறப்புக் கூறினவர் இனிக் குதிரைச் சிறப்பு கூறினராயினர்.

## குதிரை.

---

குதிரை யென்பது - யுத்தவல்லப முடைய குதிரையை. அது- ஜாதி ஒற்றுமையால் யானைக்குப் பின்வைத்துகூறினர்.

குதிரைப்படைச் சிறப்பென்பது: குதிரைபபடையின் பெருமை. அது யானைக்கின மாதலின் - இங்கே யானைப் படைச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

## குதிரைப்படைச்சிறப்பு.

பூவேறி நான்முகனும் புள்ளேறித் திருமாலும், சேவேறிக் கண்ணுதலுஞ் செய்வதென்னே தீஞ்சுவை கொள், பாவேறிப் புகழ்பெற்றுப் பாராளும் வனியர் தழல், மாவேறிப் பகைவென்று மாநிலங் காத்தருள் வாரே. (உசு)

(இ-ள்.) நான்முகன் பூ ஏறியும் - பிரமதேவர் பூவிலே றியும், திருமால் புள் ஏறியும் - விஷ்ணு கருடவாகனத்தி லேறியும், கண்ணுதல் சே ஏறியும் - சிவபெருமான் இடப வாகனத்திலேறியும், செய்வது என் - செய்கின்றதென்னே யிருக்கிறது, [இம் மூவர்களும் படையல்லாத திறமற்ற வாக னம் வைத்துக்கொண்டு தந்தொழிலை நடத்தலால் யாதொரு பிரயோஜனமும் இல்லை யென்றபடி] தீம்சுவை கொள் பாஏறி - மிக்க சுவைகளைக் கொண்ட பிரபந்தங்களில் ஏறி, (நிலையாய்த் தங்கி) புகழ்பெற்று - புகழை யடைந்து - பார் ஆளும் வன்னி யா பூவுலகத்தை அரசுபுரியும் வன்னியர்கள் தழல்மா ஏறி - அக்கினிக் குதிரையிலேறிச் (செலுத்தி) பகை வென்று மாநிலம் காத்து அருள்வார் - பகைவாகளைச் சயித் துப்பூமியைக் காத்தருளுகிறார்கள் எ-று, பா ஆகுபெயர்.

**கருத்து.** வன்னியர்கள் அக்கினிக் குதிரையிலேறிச் செலுத்திப் பகைவர்களைச் சயித்து உலகத்தைக் காக்கின்றார் கள் என்பதாம்.

இதில் மூன்று மூர்த்திகளுக்கும், ஊர்தி சேனைசமூகங்க ளோடும் ஒற்றுமை யின்மையால் அவைகளை யூர்ந்து யுத்தஞ் செய்து துஷ்டர் முதலியவர்களைச் சம்மரித்து உலகத்தைப் பரிபாலித்தலில்லையாதென்பார் "செய்வதென்னே" என்று ரென்க.

குதிரைச் சிறப்பு கூறினவர் இனி தேர்ச்சிறப்பு கூறினு ராயினர்.

## தேர்.

---

தேர் என்பது - இரதம் அது குதிரையோடும் அதன் பின்வருதலாதலின், குதிரைக்குப் பின்வைத்து கூறினர்.

தேர்படைச் சிறப்பென்பது. - தேர்ப்படையின் பெருமை. அது குதிரைப் பூண்டிருக்கப்படும் ஆதலின், இங்கே குதிரைப்படைச் சிறப்புக்குப் பின்வைத்து இரண்டுகவிகளால் கூறினர்.

### தேர்ப்படைச்சிறப்பு.

பார்விழாப் பெறக்காக்கும்பண்ணுடையர் பதமலரில்
போர்விழாப் புரிவேந்தர் பொன்னவிர்மாமுடி வணக்கி
யார்விழா திருப்பார்க ளமரர்மலர் மழை சொரியத்
தேர்விழா வுறவுகைக்கிற் றிருவிழாத் தினமென்றே. (1

(இ-ள்.) பார் விழாப் பெற காக்கும் பண்ணுடையர் - உலகுகளிப்பையடைய அரசுசெய்கின்ற தமிழ் நாடரென்னும் சேர சோழ பாண்டியராகிய வன்னியர்கள் அமரர் மலர் மழை சொரிய விழா உறத்தேர் உதைக்கில் - தேவர்கள் பூமாரி பொழிய சக்கரஞ் சுழலும்படித் தேரைச் செலுத்துவார்களானல், திருவிழாத் தினம் என்று - அது உற்சவதினமென நினைத்து, விழா போர் புரி வேந்தர் - தளர்ச்சியடையாது யுத்தத்தைச் செய்யும் அரசர்களில் பொன் அவிர் மாமுடி வணக்கி விழா திருப்பார்கள் யார் - (தங்கள்தங்கள்) அழகு விளங்கிய மகத்தாகிய முடியை வணக்கித் தெண்டனிடாதவர்கள் எவர்கள், [யாவருந் தெண்டனிடுவார்கள் என்றபடி].

**கருத்து.** வன்னியர்கள் தேவர்கள் பூமாரி பொழியஇரதமூர்ந்து வருவார்களானல் அதுதேவ உச்சவதினமெனநினைத்துவேந்தர்கள் எல்லோரும் தமது இரத்தினகிரீடங்கொண்ட முடியை வணக்கித் தெண்டனிடுவார்கள் என்பதாம்.

## இதுவும் அது.

செங்கதிரோனோராழித் தேரேறித் திகழ்வதுவும், அங்கசன்மா ருதத்தேரூர்ந் தடலாண்மை செலுத்துவதும், தங்கமனு நெறிபிழையாத் துகளறு வன்னிய வீரர், அங்கிரத மிவர்திரத்துக் கணுவளவு மிணையாமோ. (உஅ)

(இ-ள்.) தங்கமனு நெறிபிழையா-உயர்வாகிய (தங்கள் குல முதல்வர்களால் சொல்லியிருக்கிற) மனுமுறை வழிகளிலே தவறாத, துகள் அறு வன்னியவீரர் - குற்றமற்ற வன்னிய வீரர்கள், அங்கி ரதம் இவர் திறத்துக்கு - அக்கினி இரதம் ஏறிச் செலுத்தும் ஆண்மைக்கு, செங்கதிரோன் ஓர் ஆழித் தேர் ஏறித் திகழ்வதும், சூரியன் ஒற்றைச் சக்கிரத்தையுடைய இரதத்திலேறிச்செலுத்துவதும், அங்கசன் மாருதத்தேர் ஊர்ந்து அடல் ஆண்மை செலுத்துவதும் - மன்மதன் தென்றற்றேரேறி(நடத்தி) மிக்க ஆண்மையைக்காட்டுவதும் (ஆகிய இவைகளெல்லாம்) அணு அளவும் இணையாமோ - அணுத்துணையேனும் ஒப்பாகுமா? எ-று. ஓ-அசை.

**கருத்து,** வன்னியர்கள் அக்கினி இரதத்துக்கு சூரியன் இரதமும், மன்மதன் இரதமும் கொஞ்சமேனும் ஒப்பாகா என்பதாம்.

இதில் "அங்கிரதமிவர்திறத்துக்கு" என்றதை அங்கு இரதமிவர்திறத்துக்கு எனப்பிரித்துஅப்படியாகஇரதமேறிச் செலுத்தும் வல்லமைக்கு எனப் பொருள் கொண்டு - முன் கவியைத் தழுவிக்கொண்டு அமைக்கினும் மிக்க நன்றென்க இன்னும்சூரியன்இரதமும். சந்திரன்இரதமும், சேனசமூகங்களோடும் ஒற்றுமையுடையதாயினும் - சூரியன் இரதத்துக்கு முடச்சாரதியும்,மன்மதன்இரதத்துக்குஉருவின்மையும்உடைமையுடைய வாதலால் இவ்விரதத்துக்கு ஒப்பாகா வென்பார் "இரத மிவர் திறத்துக் கணுவளவு மிணையாமோ" என்றார்

என்க. இங்கே இரத மிவர் திறம் என்றதனுல், அதிரத சமரத அர்த்தரத முதலிய சாரத்திய கதிகளும், யானையேற் றங் குதிரையேற்றங்களும், பத்மயூகம் முதலிய யூகவிசேடங்க ளும், கொள்க. அதிகம் ஸ்மிருதியாதிகளாற் காண்க.

இது வரையில் படையைக் கூறினவர் இனி அரண் கூறினாரயினர்.

## அரண்.

---

அரண் என்பது:—கோட்டை. அது படைக்கு ஆதார மாதலின், இங்கே படைக்குப் பின்வைத்து நீரரண், மதி லரண், மலையரண், காட்டரன் என நான்கனுள் நீரரண் மதி லரண் இவ்விரண்டையும் அகழியாகவும், மற்றையவை அகத் தும்புறத்துநிற்றலால்அவைகளைப்பொதுவில் அரணுகவும்இர ண்டாக்கி இரண்டுகவிகளால் கூறியிருக்கிறர் என்க. நால்வகை யரணை தி-கஉ-வ-தி -"மலையரண் காட்டரண் மதிலர ணீரா- ணையது சிறப்பினுல் வகையாணே" என்னும் சO-வது சூ-க. நாயனுரும் "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற் - காடு முடைய தரண்" என்றுர் என்க.

கோட்டை? அரண், காவல் என்பன ஒரு பொருட் சொற்கள்.

## அகழின் சிறப்பு.

அகழின் சிறப்பென்பது:—மதில்சூழ்கிடங்கின் பெரு மை. அது படைகளுக்கு ஆதாரமாகமதிலைச் சூழ்ந்திருத்த லின், இங்கே படையுறுப்பாகிய தேர்ப்படைச் சிறப்பைத் தழுவி அரணுக்கு முதலில் வைத்து கூறினுர்.

பேராழிச்செலுத்திவயம்பெறவணியர்க்கிடமாகிக்
கூராழிப்பானகரைக்குறை சொல்கம்பைநகருடுத்திட்,
டோராழித்தேரிருபாலொனுங்கவயரெயிற்புடைசூழ்,
சீராழி யாமகழின் சிறப்பெவரே யுரைப்பவரே. (உகூ)

(இ-ள்.) பேர் ஆழி செலுத்தி வயம்பெற - பெரிய ஆக்கினை சக்கிரத்தைச் செலுத்தி (உலகு) வசமாகும் வண்ணம், வன்னியர்க்கு இடம் ஆகி - வன்னியர்களுக்கு ஆதாரதானமாகி, கூர் அழிப்பான் நகரை, (விஷ்ணு உலகமாகிய) வைகுண்டத்தையும், குறை சொல் - இகழத்தக்கச் சிறப்பு வாய்ந்த, கம்பை நகர் உடுத்திட்டு - காஞ்சி நகரமானது (தன்னை ஆடையாக) உடுத்தம் பெற்று, ஓர் ஆழித்தேர் இருபால் ஒதுங்க அயா எயில் புடை சூழ் - ஒற்றைச் சக்கிரத்தையுடைய சூர்யனது தேர் இருபுறமும் விலகும்படி கட்டப்பட்டிருக்கின்ற மதிலைச்சூழ்ந்த அகழியானது, சீர் ஆழி ஆம் விசாலமான சமுத்திரமே (ஆகும் ஆகையால்,) அகழின் சிறப்பு உரைப்பவர் எவரே - அவ்வகழியின் சிறப்பைச் சொல்லத்தக்கவர் யாவரே. எ-று.

**கருத்து** காஞ்சிபுரியின் மதிலைச்சூழ்ந்த அகழியானது சமுத்திரமே ஆம் என்பதாம்.

அரண் சிறப்பு.

அரண் சிறப்பென்பது:—காவலின் பெருமை. அது அகழியுளடங்கிய காடு மலையாதலின் இங்கே அகழின் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

சரண்புகுந்தீசனைச் சான்றோர் தம்முயிரைக்காப்பரெனும், வரம்புளதங்கது வியப்பின் மருவியதோர் வழக்கன்றால், முரண்புகுதோட் செருநர்வரின் மூதுலகோர் வன்னியர்தம், அரண்புகுந்து தம்முயிர்காத்தமர்ந்திருப்பலாதலினே. (ரு௰)

(இ-ள்.) மூது உலகோர் - பழமையான உலகத்தவர்கள், முரண்புகுதோள் செருநர் வரின் - வலிய தோளினையுடைய பகைவர்கள் வருவார்களானல், வன்னியர் தம அரண்புகுந்து வன்னியர்களது அரணிற் புகுந்து, தம் உயிர்காத்து அமர்ந்திருப்பார் - தங்களுயிரைக் காப்பாற்றிக்கொண்டு தங்கியிருப்பார்கள், ஆதலின் - ஆதலால், சான்றோர் - பெரியோர்கள்,

ஈசனைச் சரண்புகுந்து தம் உயிரைக் காப்பர் எனும் வரம்பு உளது - கடவுளை வழிபட்டுத் தங்களுயிரைக் காத்துக் கொள்வார்களென்று சொல்லும் வரம்பு ஒன்றிருக்கிறது, அங்கு அது-அஃதானது, (யாவருக்கும் சாக்ஷியனவையின்மையால்)—ஓர் வியப்பின் மருவய வழக்கு அன்று - ஒரு ஆச்சரியத்தைப் பொருந்திய வழக்கினையுடையதல்ல எ-று.

**கருத்து.** உலகத்தவர்களுக்குப் பகை நேரிட்ட காலங்களில் வன்னியர்களது அரணைச் சேர்ந்தே தங்களுயிரைக் காத்துக்கொள்ளுகிறார்கள் என்பதாம்.

இதுவரையில் அரண் கூறினவர் இனி அரசு கூறினராயினர்.

## அரசு.

அரசென்பது :—இராஜ்ஜிய பாரத்தன்மை. அது அரணையுடையதாதலின், இங்கே அரணை அடுத்து வைத்து கொடி அரசாக்ஷி மண்டபம், சிங்காதனத்திருத்தல், முடிதரித்தல், புயகேயூரகிரீடம், குடை, செங்கோல் வண்மை, செங்கோல் நடத்தல், அறத்தினெறி, ஆக்கினைச் சக்கிரம், தொழினெறி பிறழாமை, முத்திரை மோதிரம், துட்டநிக்கிரகம், வாயில் காத்தல், தொழுவன் முதலியவை, செல்வாக்கு, புகழ், மாசறகற்றல், பெருந்தன்மை, இதய வண்மை, இராஜ சமுகம், பதியிருத்தல், மன்னர் சூழ்தல், மொழி தவருமை, சாந்த முதலியவை, கொடைவளம் வள்ளற்றன்மை, அடுத்தவர்க்குத்தாழ்வின்றெனல், உமையருள் பெற்றோரெனல், அஷ்ட ஐசுவரியம், தசாங்கம், அரசு, வில்லின் புகழ் கூறுதல், என முப்பத்து நான்கு சிறப்பாக முப்பத்தேழு கவிகளால் கூறினர், நாயனரும் "அறனழுக்காதல் லவைநீக்கி மறனிழுக்கா-மானமுடைய தரசு" என்றார் என்க.

அரசக்குரிய சிறப்புகள் இங்ஙனம் கூறியவைகளையும் கூறாது விட்டிருப்பவைகளையும் ஸ்மிருதிபுராண விதிகாசாதிகளிலேயே தெரிந்துணர்க.

## கோடிச்சிறப்பு.

கொடியின் சிறப்பென்பது:—கொடியின் பெருமை. அது அரசுக்கு வெற்றிக்குறியாக மதின் முதலிய அரண்களிற் றங்கலின், இங்கே அரணுறுப்பாகிய அரண் சிறப்பைத் தழுவி அரசுறுப்புக்கு முதலில் வைத்து கூறினர்.

சுடர்க்கொடியை வனக்கொடியுந் துகளில் வெற்றிப்புலிக்கொடியும், அடற்புவிமூன் றினுந்தாமே யரசியற்றும்படி தாவச், கடற்புவியி னிரந்தரமுங்கருணைபுரி தாயேபோல், இடர்பகையிலாது வன்ய ரெவ்வுயிரும் வளர்ப்பாரே. (௩௧)

(இ-ள்.) கடல் புவியில் - கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில், - வன்னியர் - வன்னியர்கள், சுடர்க்கொடியும் - அக்கினிக் கொடியும், ஜவனக் கொடியும் - பஞ்சவன்னப் பிருதும், வெற்றிப் புலிக் கொடியும் - வெற்றியைத் தராநின்ற புலிக்கொடியும், அடர்புவி மூன்றினும் தாமே அரசு இயற்றும்படிதாவ - நெருங்கிய மூன்று உலகத்திலும் தாமே அரசு புரியும்படி தாவாநிற்க - நிரந்தரமும் கருணைபுரிதாயே போல் – எப்பொழுதும் அருளோடும் அன்பு பாராட்டும் தாயைப்போலும், எவ்வுயிரும் இடர் பகை இலாது வளர்ப்பார் - எந்த உயிரையும் சிறுமைபகையில்லாது வளரும்படி செய்கிறார்கள். எ-று.

**கருத்து**. வன்னியர்கள் கொடிகள் மூன்று உலகத்தையும் தாவிக்கொண்டிருக்கும்படி உலகத்தைக் காக்கின்றார்கள் என்பதாம்.

இதில் "நிரந்தரமுங் கருணைபுரி தாயேபோல்" என்றதற்கு இவர் இராமாயணம் பாலகாண்டம் அரசியற்படலத்தில்

"தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம் பயப்பிற் - சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்குநீரா- னேயொக்கு

மென்னின் மருக்தொக்கு நுணங்குகேள்வி, ஆயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னன்''

என ச-வது பாடலிலும் 'எவ்வுயிரும் வளர்ப்பார்'' என்றது. அரசனனவன் உயிர்களெல்லாவற்றிற்கும் உடம்புபோ லிருந்து காக்கின்றான் என்பதே அதற்கு

''வயிர வான்பூணணிமடங்கன் மொய்ம்பின,னுயிரெலா ந் தன்னுயிரொப்பவோம்பலாற், செயிரிலா வுலகினிற்சென்று நின்றுவா -முயிரெலா முறைவதோருடம்பு மாயினன்''

என க0-வது பாடலிலும் கூறினர்என்க. சுடர்க்கொடி என்வே, சுடர் என்பது ஒளி, ஒளியெனவே, வில்லென விற்கொடியும், ஜவனக் கொடி எனவே, வனம் - ஜலம் அதினுடைய மச்சமென மச்சக்கொடியும், ஐ - அழகு, புவி மூன்றெனவே மலயமானடு, சோழனடு, பாண்டியனடு முன்னட்டையுங் குறிப்பாலுணர்த்து மென்னுங் கருத்தால் அக்கினிக் கொடியும் பஞ்சவன்னப் பிருதுமென சேரிற் கூறுது, சுடர்கொடியும், ஜவனக்கொடியும் எனக் கூறினரென வுணர்க. அவற்றுள் சேரனுக்கு விற்கொடியும், சோழனுக்குப் புலிக்கொடியும், பாண்டியனுக்குமீனக் கொடியும் ஆம். இவைகளை - தி - கஉ - வது - தி ''சோற்கு விற்கொடி தென்னர்க்கு கயற் கொடி'' என்னும் ககo - வது சூத்திரத்தினும், சோழற்கு புலிக்கொடியாகுமென்ப'' ககக - வது சூத்திரத்தானு முணர்க. வனம் ஆகுபெயர்.

## அரசாட்சிமண்டபச் சிறப்பு.

அரசாக்ஷி மண்டபச் சிறப்பென்பது:—அரசாளுகைக்கு வீற்றிருக்கும் மண்டபத்தின் பெருமை. அது கொடிகளைக் கொண்டிருத்தலின், இங்கே கொடிச் சிறப்புக்குப் பின்வைத்துகூறினர்.

அண்டர் மலர் மழைசொரிய வந்தணர்பல்லாண் டிசைப்பத், தண்டனிட்டுப் பொருந்தலருஞ் சபங்கூற

வன்னிமன்னர், கொண்டபசும்பொன்வேய்ந்து குலவு பலமணிகுயிற்றும், மண்டபத்தில் வீற்றிருக்கை மண்டபம் பெற்றிடுபேறே. (௩௨)

(இ-ள்,) வன்னிமன்னர் - வன்னியரென்னும் அரசர்கள், அண்டர் மலர் மழைசொரிய - தேவர்கள் பூமாரிபொழியவும், அந்தணர் பல்லாண்டு இசைப்ப - பிராமணர்கள் ஆசீர்வாதஞ் சொல்லவும், பொருந்த லருந்தண்டன் இட்டுச் சயம் கூற - பகைவர்களும் நமஸ்காரஞ்செய்து (நின்றுக்கொண்டு) ஜயாவிஜயீபவா வென்று சொல்லவும், கொண்டபசும்பொன் வேய்ந்து - (அதிக விலை) கொண்ட பசும்பொன்னினல் கட்டி, குலவு பலமணி குயிற்றும் - விளங்கும்பல இரத்தினங்களைப் பதிக்கப் பெற்றிருக்கிற, மண்டபத்தில் வீற்றிருக்கை - அரசாக்ஷி மண்டபத்தில் கொலுவீற்றிருத்தலானது, மண்டபம் பெற்றிடுபேறு - அம்மண்டபம் பெற்ற தவப்பய ஞகும். எ-று.

கருத்து. வன்னியர்கள் அரசாக்ஷி மண்டபத்துள் கொலுவீற்றிருக்கைக்கு அம்மண்டபம் தவஞ்செய்திருத்தல் வேண்டும் என்பதாம்.

## சிங்காதனத்திருத்தற்சிறப்பு.

சிங்காதனத்திருத்தற் சிறப்பென்பது. சிங்காதனத்திற்றங்குதலின் பெருமை. அது அரசாக்ஷி மண்டபத்துள் தங்குதலின் இங்கேஅரசாக்ஷி மண்டபச்சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தங்காதனன்பனிறை யென்னமாதர் சந்தசமுந்தொழுதெழுவார் சலியாதாகம், தங்காதனனேய நட்பிற்சிந்தேயாவுந் தகுபுலியு மோர்துறையிற் றண்ணீர் மாந்தும், சிங்காதனம்பசும்பொன் மணிதுசாதி தெளிவுறு

வேதியர்க்குதவும் வன்னிமன்னர், சிங்காதனத்தின் மிசையமர்ந்துநாளுந் திகழரசுசெயுங் கருணைச் செயலா லன்றோ. (கக)

(இ-ள்.) தெளிவு உறு வேதியர்க்கு - (பிரமநிஷ்டையில்) தெளிந்த பிராமணர்களுக்கு, சிங்காது - குறையாது அனம் பசும் பொன் மணி தூசு ஆதி உதவும் வன்னிமன்னர் - அன்னம் சொன்னம் இரத்தினம் வஸ்திரம் முதலியவைகளைக் கொடுக்கின்ற வன்னிய அரசர்கள், நாளும் சிங்காதனத்தின் மிசை அமர்ந்து திகழ் அரசு செயும் கருணைச் செயலால் - என்றும் சிங்காதனத்தின்மேலமர்ந்து விளங்க அரசு நடத்துகின்ற அருட் செய்கையால், மாதர் அன்பன் தம் காதன் இறை என்ன - மகளிர்கள் அன்புக்குரியனாகிய தமது நாயகனைத் தெய்வமென நினைத்து, சந்ததமும் தொழுது எழுவார் - எப்பொழுதும் வணங்கி யெழுவார்கள், ஆவும் புலியும், பசுவும் புலியும் ஆகம் சலியாது தங்கு ஆதன் அனைய நட்பில் சிறந்து - உடல் கெடாவண்ணந் தங்கும் உயிரைப்போலும் நட்பிற் சிறந்ததாகி, - தகுஓர் துறையில் தண்ணீர் மாந்தும் - தகுதியினையுடை யனவாகக் கூடி ஒரு துறையில் தண்ணீர் குடிக்கும். எ-று. அன்றோ - அசை.

காந்தன் என்பது காதன் என இடை குறைந்து நின்றது.

**கருத்து**. வன்னியர்கள் சிங்காதனத்தின்மேல் அமர்ந்திருத்தலால், மாதர்களுக்கு கற்பும், உயிர்களுக்கு நட்புங்கெடாதிருக்கின்றன வென்பதாம்.

இதில் "ஆவுந்தகுபுலியு மோர் துறையிற் றண்ணீர் மாந்தும்" என்றதற்கு இராமாயணம் பாலகாண்டம் அரசியற்படலம் "வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசைய, ருள்ளமு மொருவழி யோட நின்றவன், தள்ளரும் பெரும்புகழ் தயரதப்பெயர், வள்ளல் வள்ளுறைபையின் மன்னர் மன்னனே" என்னும் கூ-வது பாடலிலும் கூறினர் என்க.

## முடிதரித்தற்சிறப்பு.

முடிதரித்தற்சிறப்பென்பது:—கிரீடந்தரித்தலின் பெருமை. அது சிங்காதனத்தில் அமர்ந்தே யாதலின், இங்கே சிங்காதனத்திருத்தற் சிறப்புக்குப் பின்வைத்து இரண்டுகவிகளால் கூறினர்.

### கோச்சகம்.

தன்முடிமேற் புவிதாங்குந் தனியரவிற் றுயில்
வோர்க்கும், சொன்முடிவாம் பரமனுக்குந் தோன்றுமி
ளைப்பொழித்திடுவார், பொன்முடிசென் னியிற்றாங்கிப்
புகழ்வனிய வரசரொன்னார், முன்முடியக் குடிதழைய
முதுலகம் புரத்திலினே. (௩௪)

(இ-ள்.) புகழ் வனிய அரசர் - யாவரும் புகழாநின்ற வன்னியரென்னும் அரசர்கள், பொன்முடி சென்னியில் தாங்கி - அழகிய (இரத்தின கிரீடத்தைத்) தலையிற் சூடி, முன் ஒன்னார் முடிய - முதலில் பகைவர்கள் அழியவும் குடி தழைய - குடிகள் தழையவும், முது உலகம் புரத்தலின் - பழமையான இவ்வுலகத்தைக் காத்தலால், - தன் முடிமேல் புவிதாங்கும் - தனது முடியின்கண் பூமியை வைத்துத் தாங்குகின்ற, தனி அரவில் துயில்வோர்க்கும் ஒப்பற்ற ஆதிசேஷ சயனத்தில் அறிதுயில் கொள்ளும் விஷ்ணுவுக்கும் – சொல் முடிவு ஆம் பரமனுக்கும் - சொற்களின் முடிவிடப் பொருளாகிய சிவபிரானுக்கும், தோன்றும் இளைப்பு ஒழித்திடுவார் - (சம்மரித்தல் காத்தல் என்னுந் தொழில்களால்) உண்டாகும் சிரமத்தை நீக்குகிறார்கள், எ-று. ஏ அசை.

கருத்து. வன்னியர்கள் முடிதரித்து விஷ்ணுமூர்த்திக்கும், சிவபிரானுக்கும் உண்டாகும் சிரமத்தை நீக்குகிறார்கள் என்பதாம்.

இ-தல். "இளைப்பொழித்திடுவார்" என்றதனால் துஷ்டர் முயிலியவைகளைச் சம்மரித்தலால் . சிவபிரானுக்கும்,

உலகத்தைக் காத்தலால் விஷ்ணுவுக்கும் சிரமபரிகார மாகு தலாமென்க. துஷ்டர் முதலியோரை சம்மரித்தலே பின் சுறு வது கவியிற் காண்க.

## இதுவும்அது.

தேவர்முடி திங்கண்முடி சேணுருமிரவிமுடி, மூ
வர்முடி முனிவர்முடி மும்மையுல கினில்வாழ்வோர்,
யாவர்முடியும் விளங்கு மென்றுமொரு முடிவில்லாக்,
கோவிறைவன் னியர்முடி மேற்குலவுமுடி விளங்கலினே.

(ரீ-ள்.) என்றும் ஒரு முடிவு இல்லா - எக்காலத்தும் ஒரு விதத்தினாலும் அழிவில்லாத, கோ இறை வன்னியர் முடிமேல் - இராஜாதி ராஜர்களாகிய வன்னியர்களது தலே யின்மீது, குலவு முடி விளங்கலின் - விளங்குகின்ற (இரத் தின) கிரீடந் தங்குதலால்; தேவர் முடி - தேவர்களது முடி களும், திங்கள் முடி - சந்திரனது முடியும், - சேண் ஆரும் இரவிமுடி - ஆகாயத்திலுலாவும் சூரியனது முடியும், மூவர் முடி - (பிர்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய) மூவருடைய முடி களும், முனிவர்முடி முனிவர்களது முடிகளும் - மும்மை உலகினில் வாழ்வோர் யாவர் முடியும் - (சுவர்க்க மத்தி, பாதாள மென்னும்) மூன்றுலகத்திலும் (முற்கூறியவர்களே யல்லாதவேறே) வாழப்பட்ட யாவர்களுடைய முடிகளும், விளங்கும்-அழியாது தங்குவனவாகும். எ-று.

கருத்து. வன்னியர் சிரத்தில் கிரீடம் விளங்க தேவர் கள் முடிகளும், சந்திரன் முடியும், சூரியன் முடியும், பிரமா விஷ்ணு ருத்ரன் ஆகிய மூவர் முடிகளும், முனிவர்கள் முடி களும், மூன்றுலகத்தவர்கள் முடிகளும், விளங்கும் என்ப தாம்.

இதில் - தேவாலயங்களுக்கு யாதொரு குறையில்லாது நடத்தலால், மூவர் முடிகளும், தேவர் முடிகளும், முனிவர் முடிகளும் விளங்கும் என்றும் நித்தியகர்மா நுஷ்டானங்களே

பிராமணுதியர் அனைவர்களுக்குத் தக்கதா வழுவாது நடத்த லால் சூரியசந்திரர் முடிகள் விளங்கும் என்றம், பகையின் மையால் மூன்றுலகத்தினும் உள்ள மற்றைய யாவர்களு டைய முடிகளும் விளங்குகின்றன வாகும் என்றுங் கூறினு ரென வுணர்க.

## புயகேயூர கிரீடச்சிறப்பு.

புயகேயூரகிரீடச்சிறப் பென்பது:—வாகு வலயத்தோ டும் முடிவிளங்கலின் பெருமை. அது முடிதரித்த பிறகாத லின், இங்கே முடிதரித்தற்சிறப்புக்குப்பின் வைத்துகூறினுர்.

இயனடுநீண் டிருபுடைதாழ்ந் திடவமைத்த வ
ணைமூன்றின், அயன்முதன்மூ வருந்தொழின்மூன்ருங்
கியற்ற வமர்ந்ததுபோல், வயமுறு வன்னியவரசர் வட
வரைபோல் வீறியதிண், புயமுடியு மணிமுடியும்
பொருந்தியது புதுமைத்தே. (௩௬)

(இ-ள்.) வயம் உறு வன்னிய அரசர் - விஜயத்தைக் கொண்ட வன்னியரென்னும் அரசர் களது, வடவரை போல் வீறியதிண் புயமுடியும் - மகம்மேருவைப்போலும் பணைத்த வலிமையைக் கொண்ட புயகே யூரங்களும், மணி முடியும் - இரத்தினக் கிரீடமும், இயல் நடுநீண்டு - இயல் பினல் மத்திபபாகம் உயர்ந்து, இருபுடை தாழ்ந்திட அமை த்த - இரண்டு பக்கமும் தாழும்படி அமைக்கப்பட்டிருக்கிற அணை மூன்றில் ஆங்கு - (சிரம்புயங்களாகிய) மூன்ரு சனத்தினிடத்திருந்தே, தொழில் மூன்று இரவிற் - (ஆக்கல் அழித்தல் என்னும்) மூன்று தொழிலையும் செய்யும் பொரு ட்டு, அயன் முதல் மூவரும் அமர்ந்ததுபோல் பொருந்தியது பிரமா விஷ்ணு உருத்திரன் ஆகிய மூவர்களும் அமர்ந்தது போல் பொருந்தியிருக்கின்றதானது, புதுமைத்து - ஆச் சரியப்படத்தக்கதாகும். எ-று.

**கருத்து.** வன்னியர்கள் தரிக்கும் புயகேயூரகிரீடமானது பிரமா, விஷ்ணு, உருத்திரன் ஆகியமூவரும் சிருட்டி. திதி சம்மாரம் என்னும் முத்தொழிலையும் முறையே நடத்த சிரம் புயங்களாகிய ஆசனங்களில் தங்குதல் பொருந்தியிருத்தலானது யாவரும் வியக்கத்தக்கதேயாம் என்பதாம்.

இதில் - சிரமுடி உருத்திரனையும், புயகேயூரங்களில் வலதுபுயத்திலிருப்பது பிரமனையும், இடதுபுயத்திலிருப்பது விஷ்ணுவையும், ஒக்குமென்னுங் கருத்தான் என்க.

## குடைச்சிறப்பு.

குடைச்சிறப்பென்பது:—சந்திரவட்டக் குடையின் பெருமை. புயகேயூர கிரீடந்தரித்த பிறகு நிழல்செய்ய அமைத்தலின், இங்கே புயகேயூர கிரீடச் சிறப்புக்குப்பின் வைத்து கூறினர்.

படையுடைய படிவேந்தர் பணிந்திடுவோர் மனுநீதி, நடை வருணச் சிரமநெறிநழுவாது காத்தெவர்க்கும், விடையவன்றனருள்பெற்ற வீர வன்னிமன்னர் கொற்றக், குடைநிழலைத்தந்துகலிக் கோடை தணித்திடுவாரே. (௩௭)

(இ-ள்.) படை உடையபடிவேந்தர் பணிந்திடுவோர் - (இரத கஜ துரக பதாதிகளென்னும் நான்கு வகைப்) படைகளைக் கொண்ட உலகத்து மற்றைய அரசர்கள் வந்து வணங்கும் பெருமை யினையுடையாராகிய விடையவன்றன் அருள் பெற்ற வீரவன்னிமன்னர் - சிவபிரானது அருளைப்பெற்ற வீரமுடைய வன்னியரென்னும் அரசர்கள், மனுநீதி நடை வருண ஆச்சிர தருமம் நழுவாது - மனுநீதி நடையினின்றும் வருணதருமமும் ஆச்சிரம தருமமும் கெடாது, எவர்க்கும் கொற்றக் குடை நிழலைத் தந்துகாத்து - யாவருக்கும் விஜய சந்திர வட்டக் குடைநிழலைக் கொடுத்துக்காத்து, *கலி

---

*இதற்கு அதருமம் என்னும் வெப்பம் எனப் பொருள் கொள்ளினும் அமையு மென்க.

கோடை தணிந்திடுவார் - வறுமை என்னும் வெப்பத்தைத் தணித்து விடுகின்றார்கள். எ-று.

ஆச்சிரமதரும மென்றது. ஆச்சிரதரும மென ஈறு குறைந்து நின்றது.

**கருத்து.** வன்னியர்கள் யாவருக்கும் விஜய சந்திர வட்டக் குடைநிழலைக்கொடுத்து, வருணாச்சிரம தருமநழு வாது காத்து, கலியென்னும் கோடையைத் தணித்து விடு கின்றார்கள் என்பதாம்.

இதில். "நடைவருணாச்சிரம தருமம் நழுவாது" என்ற தனால் பாவச் செய்கையில்லாது எனவாகும். அதற்கு ஷை இராமாயணம் பாலகாண்டம் அரசியற்படலம் "மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்துதேய்வின்று, தண்ணிமல் பரப்பவு மிருளைத் தள்ளவு மண்ணறன் குடைமதி யமையு மாதலின், விண்ணிடை மதியினை மிகையி தென்பவே" என ௯-வது கவியினும் கூறியிருக்கின்றார் என்க. வருணதருமமெனவே பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் ஜாதி களின் ஒழுக்கமும், ஆச்சிரம தருமமெனவே பிரமசாரி கிரு கஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசிஎன்னும் ஆச்சிரமிகளின் ஒழுக்கமும் கெடாதென்றார் என்க.

## செங்கோற்சிறப்பு.

செங்கோற் சிறப்பென்பது:—ஆணை நடத்தும்கோலின் பெருமை. அது குடைநிழலிற் றங்கியே கைக்கொள்ளுதலின் இங்கே குடைச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

### அறுசீர்க்கழிநெடி லடியாசிரிய விருத்தம்.

வெங்கோப மதம்பொழியும் விண்ணவர்கோ னும் பணிகர் வேழமுண்டோ, பைங்கோலஞ் சேர்கனகப் பஞ்சதருவனையபா தபமற்றுண்டோ, இங்கோத வான் சுரபிக் கிணையுண்டோ வன்னிமன்னரெனுமேன் மக்கள் செங்கோனுக்கெதிராங்கோல் செகதலத்தி லொன்றுண் டோசெப்புவீரே. (௧௮)

(இ-ள்.) வெம் கோபமதம் பொழியும் விண்ணவர்கோன் உம்பல்நிகர் வேழம் உண்டோ, வெவ்விய கோபத்தோடும் மதம் பொழிதலையுடைய இந்திரனது வெள்ளையானையை ஒப்பாகும் யானை வேறிருக்கிறதா? பை கனகக்கோலம் சேர் பஞ்சதரு அனைய பாதபம் மற்று உண்டோ - பசும்பொன்னிறக் (ஒளிரினைக்) கொண்ட ஐந்தருக்களை ஒப்பாகும் தருவேறு இருக்கிறதா? இங்கு ஓது அவான் சுரபிக்கு இணை உண்டோ - இவ்வியல்பாகவே சொல்லப்படுகிற தெய்வப்பசுவாகிய அக் காமதேனுவை ஒப்பாகும் (பசுவேறு) இருக்கிறதா? (என்பபோல), சகதலத்தில் - பூதலத்தின்கண், மேன்மக்கள் எனும் வன்யமன்னர் - மேன்மக்களென்று யாவரும் சொல்லாநின்ற வன்னியரென்னும் அரசர்களது, செங்கோலுக்கு எதிர் ஆம் கோல் ஒன்று உண்டோ - சொங்கோலை ஒப்பாகுங் கோல் வேறுவொன்று இருக்கிறதா?, செப்புவீர் - சொல்லுவீர்களாக. எ-று.

**கருத்து.** வன்னியர்கள் செங்கோலே உலகத்துக்கு முதன்மையுடைய தென்பதாம்

இதில். "செங்கோலுக் கெதிராங்கோல் சகதலத்திலொன்றுண்டோ" என்றது முதன்மையைக் கொண்டதாலென்க. அதாவது உலகத்து குடிகள் யாவரும் அரசனது செங்கோலை நோக்கி வாழவேண்டியிருப்பதாலும், தருமத்துக்கு ஆதியாக விருப்பதாலும் மற்றைய கோல் இதற்கு ஒவ்வாதென மறுத்ததாகுமென்க. அப்படி குடிகள் யாவரும் செங்கோலைதானோக்கவேண்டுமென்பதற்கும், தருமத்துக்கு ஆதி என்பதற்கு நாயனார் "வானோக்கி வாழுமுலகெல்லா மன்னவன் - கோ னோக்கி வாழுங்குடி" என்றதனாலும், "அந்தணர் நூற்கும் அறத்துக்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல்" என்றதனாலும் உணர்க, மற்றைய கோல்களாவன தீக்கடை கோல் நிறைகோல், தாற்றுக்கோல் இவைகள். அடுத்த ௬௬-வது கவியிற் காண்க.

## செங்கோல்வண்மைச்சிறப்பு.

செங்கோல் வண்மைச சிறப்பென்பது:—ஆணைசெலுத் துங்கோல் வளத்தின் பெருமை. அது செங்கோலைக் கொண்டபிறகு வளந் தெரிதலின், இங்கே செங்கோல் சிறப் புக்குப் பின்வைத்து கூறினர்.

### கோச்சகம்.

வீரசம்பு முனிவேள்வி விளங்கவரு முடிவேந்தர்
சீர்மருவு கரத்தேந்து செங்கோலின் றிறத்தானே
நேரறுதீக் கடைகோலு நிறைகோலு நீடுலகி
லேரடரு முழுகோலு மிடறின்றி யிருப்பதுவே. (கக)

(இ-ள்-) வீரசம்பு முனிவேள்வி விளங்க வருமுடி வேந் தர் - வீரத்தைக் கொண்ட சம்பு விருடி யாகத்தில் உலகு விளங்கும்படி அவதரித்த மகுட மன்னவர்களது, சீர்மருவு கரத்து ஏந்து செங்கோலின் திறத்தால் - சிறப்பு பொருந்திய கையினிடத்து ஏந்தா நின்ற செங்கோல் வண்மையால், நேர் அறு தீக்கடைகோலும் -(பிராமணர்களுக்குரிய) ஒப்பில்லாத தீக்கடைகோலும், நிறைகோலும் - (செட்டிகளுக்குரிய) தராசு கோலும், ஏர் அடரும் உழுகோலும் - ஏரை நடத்து கின்ற (வேளாளர்களுக்குரிய) தாற்றுக்கோலும், இடர் இன்றி இருப்பது - கெடுதலில்லாமலிருப்பதாகும்.—எ-று.

கருத்து. வன்னியர்களது செங்கோல் வண்மையால் பிராமணர்களுக்குரிய தீக்கடைகோலும், செட்டிகளுக்குரிய நிறைகோலும், வேளாளர்களுக்குரியதாற்றுகோலும் இடரில் லாது நிற்கின்றன என்பதாம்.

## செங்கோனடத்தற்சிறப்பு.

செங்கோ னடத்தற் சிறப்பென்பது:—ஆணைக் கோலை நடத்துதலின் பெருமை. அது செங்கோல் வளத்தோடும் ஒற்றுமையுடைய தாதலின், இங்கே செங்கோல் வண்மைச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

சீராரும்வன்னிமன்னர் செங்கோன்மை செலுத்துதலால், சோராது சுரர்க்கும்பூ சுரர்க்குமிகு சிறப்புண்டாம், நீராரும் புவியின்மநு நெறிதவறு தென்பதன்றி, யாராலும் பழுதுரைக்கலாமோ சொல்வல்லீரே.

(இ-ள்,) சொல் வல்லீர் - புலவீர்காள் - நீர் ஆரும் புவியில் - சமுத்திரம் சூழ்ந்த உலகத்தில், வன்னி மன்னர் - வன்னிய ரென்னும் அரசர்கள், சீர் ஆரும் செங்கோன்மை செலுத்துதலால் - சிறப்புப் பொருந்திய (தமக்குரிய) செங்கோலை நடத்துகின்றதனால், சுரர்க்கும் சோராது - தேவர்களுக்கும் வலி குறையாது, பூசுரர்க்கும் மிகு சிறப்புஉண்டாம் பிராமணர்களுக்கும் மிக்க சிறப்பு உண்டாகும், (ஆதலால் இவர்களி ராஜ்ஜியத்தில்) மனு நீதிநெறி தவறாது என்பது அன்றி - மனுமுறை வழியினின்றும் கெடாது என்னுஞ் சொல் நிலைத்திருக்குமே யல்லது, யாராலும் பழுது உரைக்கல் ஆமோ - யாவராலே யாகிலும் பழுதுகள் சொல்லலாகுமா - எ-று.

கருத்து. வன்னியர்கள் செங்கோல் நடத்தலால் மனுமுறை வழிதவறு திருக்கின்றது என்பதாம்

அறத்தினெறிச்சிறப்பு.

அறத்தினெறிச் சிறப்பென்பது:—தரும வழியின் பெருமை. அது செங்கோல் நடத்தலால் உண்டாதலின், இங்கே செங்கோனடத்தற் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தாரேந்து புயவேந்தர் தழலிடைவந்தவதரித்தோர் தனுவான்மிக்க, சீரேந்து மறத்தினெறி திறம்பாது நிற்கின்ற செயலாலன்றே, காரேந்திச் சொரிமழையுங் கலைமறையும் வாணிபமு மடவார்கற்பும்; ஏரேந்து மவர்வாழ்வு மிடரின்றி நிற்பதன்றி யென்கொண்டம்மா. (சக

(இ-ள்.) தழல் இடைவந்து அவதரித்தோர் - அக்கினி யினிடையே வந்து தோன்றியவர்களாகிய, தனுவால் மிக்க தார் எந்து புயவேந்தர் - வில்வலியால் மிகுந்த மாலையைத் தரிக்கின்ற புயத்தினையுடைய அரசர்கள், சீர் எந்தும் அறத்தின் நெறி திறம்பாது நிற்கின்ற செயலால் - சிறப்பினையுடைய தருமத்தின் வழிகெடாது நிற்கின்ற செயலினால், - கார் எந்தி சொரி மழையும் - மேகத்தினாலே சுமந்து பொழிகின்ற மழையும், கலைமறையும் - (பிராமணர்களது) கலையாகிய வேதமும், வாணிபமும் - (செட்டியர்களது) வியாபாரமும், மடவார் கற்பும் - பெண்களது பதிவிரதா நிலைமையும், ஏர் எந்தும் அவர் வாழ்வும் - ஏரை நடத்தி ஜீவிக்கின்றவர்களாகிய (வேளாளர்களது) வாழ்வும், இடர் இன்றி நிற்பது - இடர் இல்லாது நிலை பெறுகின்றது, அன்றி என்கொண்டு - வேறெதைக் கொண்டு? (சொல்வீர்களாக.) எ-று.

கருத்து. வன்னியர்களது தரும வழியினால் மேகத்தினால் சுமந்து பொழியு மழையும், பிராமணர்களது கலையாகிய வேதமும், செட்டியர்களது வியாபாரமும், பெண்களது பதிவிரதா தருமமும், வேளாளர்களது உழவாகிய வாழ்வும் இடரில்லாது நிலைத்திருக்கின்றன என்பதாம்.

## ஆக்கினைச்சக்கரச்சிறப்பு.

ஆக்கினைச் சக்கரச் சிறப்பென்பது:—ஆணையாச் சக்கிரத்தின் பெருமை. அது தருமவழியாற் செல்லுதலின், இங்கே அறத்தினெறிச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

### வேறு.

ஊழிக்கிறைதண்கடல்வீழ்ந்தா னும்பற்கிறையந் தரமானன், கோழிக்கிறைதன்றுதைவரை குறுகினெஞ்சறநாணி, மேழிக்கிறைமூ விரண்டினென் றுமேவப்பெறுவன்னியர்செலுத்தும், ஆழிக்கிறைநாடொறு மாறு தகிலமுழுதுங் காத்தல்கண்டே. (சஉ)

(இ-ள்) மேழிக்கு மூவிரண்டில் ஒன்று இறைமேவப் பெறும் வன்னியர் - மேழிக்கு (அதனையுடைய குடிகளாகிய வேளாளர்களிடத்து) ஆறிலொரு கடமையைப் பொருந்தப் பெற்றுக்கொள்ளும் (சக்கிரவர்த்திகளாகிய) வன்னியர்கள், செலுத்தும் ஆழிக்கு - நடத்துகின்ற ஆக்கினைச் சக்கிரத்திற்கு, அதன் கடமை) நாள்தோறும் இறை மாறாது - தினந்தோறும் கொஞ்சமேனுந் தவறாமல், அகிலம் முழுதும் காத்தல் கண்டு - உலக முழுமையையுங் காத்தலைப்பார்த்து (முன்னிற் பதற்கு) நெஞ்சு அறநாணி-மனமானது மிகவும் வெட்கத்தை யடைந்து, ஊழிக்கு இறைதண் கடல் வீழ்ந்தான் - சர்வ சம்மார காலத்துக் கரசனான (வடவாமுகாக்கினி யானவன்) குளிர்ச்சி பொருந்திய கடன்மத்தியிற் சேர்ந்தான், உம்பர்க்கு இறை அந்தரம் ஆனான் - தேவர்களுக்கரசனான இந்திரன் (சுவர்க்கலோகமாகிய அந்தரமாகிவிட்டான், கோழிக்கு இறை தன் தாதைவரைக் குறுகினான் - கோழிக் கொடியோனாகிய (சுப்பிரமணியனும்) தன் தகப்பன் மலையாகிய கைலை மலை (போய்ச் சேர்ந்தான். எ-று.

கருத்து. வன்னியர்களது ஆக்கினைச் சக்கிரம் ஊழித்தீயும், இந்திரனும், சுப்பிரமணியனும் நாணும்படி தந்தொழிலை நடத்துகின்றது என்பதாம்.

இதில் "அறநாணி" என்றதனால் நடுவு நிலைமையால் அக்கினியும், வைபவத்தால் இந்திரனும், யுத்தவீரத்தால் சுப்பிரமணியனும் என்க. இச்சக்கிரந்தரித்ததாலேயே இவர்களுக்குச் சக்கிரவர்த்திகள் எனப் பெயர் வந்திருக்கின்றது. என்னை? சக்கிரவர்த்திகளாவார் அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புரூரவன், சகரன், கார்த்தவீரியன் என அறுவர். இவர்களைதி. கஉ - தி "அரிச்சந்தி ரனளன் முசுகுந்தன் புரூரவன் - சகரன் கார்த்த வீரிய னென்ன - அறுவகைச்சக்கிர வர்த்திக ளாகும்" என்னும் கOக - வதி. சூ-க. அன்றியும் ஆதொண்டச் சக்கிரவர்த்தி, இரணியவர்மச் சக்கிரவர்த்தி

பிருதுச் சக்கிரவர்த்தி முதலியோரும் கொள்க. ஆறிலொரு கடமைவேளாளர் தரல்வேண்டு மென்பதை ஷை தி - கஉ-வ -தி வேளாளர் பத்துவகை தொழில் "ஆணைவழி நிற்றல் அழிந்தோரை நிறுத்தல் - கைக்கடனாற்றல் கசிவகத்துண்மை யொக்கல் போற்ற லோவா முயற்சி மன்னிறை தருதலொற் றமை கோடல் - விருந்து புறந்தருத லருந்திய வொழுக்கம்- வேளாண் மாந்தர்க்கோரீரைந்தே" என்னும் கசஅ - வது சூத் திரத்துள் "மன்னிறைதருதல்" என்றதனு லுணர்க. மன் இறை - அதாவது அரசிறை அது - அரசனுக்குக் கொடுக்குங் கடமை.

## தொழிநெறிபிறழாமைச்சிறப்பு.

தொழினெறி பிறழாமைச் சிறப்பென்பது:—தொழி ல்நெறிகள் தவறாமையின் பெருமை. அது ஆணையாச் சக்கி ரத்தினு லாதலின், இங்கே ஆக்கினைச் சக்கிரச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

**கற்பத்தொழியா மறைபயிலுங் கவின்மேவியவந்த ணர்தொழிலும், சிற்பத்தொழில்வை சியர்தொழிலுங் தினமுமுயர்முக் குலத்தோரைப், பொற்பத்தொழுஞ்சூ திரர்தொழிலும் புகலெத்தொழிலு முறைபிறழ்ந்தே, அற்பத்தொழிலா காதரசாள் வதுபண்ணாட்டார் வந் தொழிலே.** (ருச)

(இ-ள்.) பண்ணாடர் தம்தொழில் - தமிழ் நாடரென் னும் (சேர சோழ பாண்டிய) வன்னியர்களது தொழிலா னது, கற்பத்து ஒழியாமறை பயிலும் கவின் மேவிய அந் தணர் தொழிலும் - சர்வசம்மார காலத்திலும் அழிவில் லாத வேதங்களைப் பழகும் அழகு பொருந்திய பிராமணர்க ளது தொழில்களும், சிற்பத்தொழில் - சிற்பியரது தொழில் களும், வைசியர் தொழில்களும் - செட்டியர்களது தொழில் களும், - உயர்முக்குலத்தோரைப் பொற்பத்தொழும் சூத்தி

ரர் தொழிலும்-(தம்மில்) உயர்ந்த (பிராமண க்ஷத்திரிய வைசியரென்னும்) மூன்று வருணத்தோர்களையும் விலக்ஷணத் தோடும் வணங்காநின்ற சூத்திரராகிய வேளாளர்களது தொழில்களும், புகல் எத்தொழிலும் - இன்னும் சொல்லாநின்ற எவ்வகைப்பட்ட வேறு ஜாதியர்களது தொழில்களும் தினமும் - எந்நாளும், முறைபிறழ்ந்து - (அவரவர்வரன்) முறையினின்றுந்தவறி, அற்பத்தொழில் ஆகாது - அற்பத் தொழிலாகப் போய்விடாது, அரசு ஆள்வது - அரசாளுவதாகும் எ-று, ஏ-ஆசை.

கருத்து. வன்னியர்களது தொழிலானது பிராமணர்களது தொழில்களும், சிற்பியர்கள் தொழிலும், செட்டியர்கள் தொழில்களும், சூத்திரராகிய வேளாளர்கள் தொழில்களும், இன்னும் மற்றைய யாவருடைய தொழில்களும் கெடாவண்ணம் அரசாள்வது ஆகும் என்பதாம்.

இதில் தொழில்களும் என உரை கொண்டதனுல் பிராமணர்கள் தொழில்கள் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஏற்றல், ஈதல் என ஆறு, வைசியர்களது தொழில்கள் ஓதல் வேட்டல் ஈதல். உழுதல், பசுக்காத்தல். வாணிகம் என ஆறு; சூத்திரர் அதாவது வேளாளர்களது தொழில்கள் உழுதல் பசுக்காத்தல், வாணிகம், குயிலுவத்தொழில், நெயல் காருக வினையாக்கல், உயர் மூவருணத்தவர்களுக்கும் ஏவிய தொழில்களைச் செய்தல் என ஆறு; சிற்பத்தொழில் கல், பொன் முதலிய லோகங்கள், செங்கல். மரம், சுதை, தந்தம், வன்னம், கண்டசருக்கரை,மெழுகு எனப்பத்தினுலு மியற்றுவது என பலவற்றையுங் காட்டுமென்க. இவைகளை தி-கஉ-வ-தி. ஓதலோது வித்தல் வேட்டல் வேட்பித்த - லீதலேற்றலென்றிரு மூவகைய - வாதிகாலத் தந்தணாறு தொழில்" என்னும் எஉ-வது சூத்திரத்தானும். "வணிகராறுதொழி லோதல் வேட்டலீதலுழவு பசுக்காவல் வாணிகம்" என்னும் எசு-வது சூத்திரத்தானும், "வேளாளராறு தொழி லுழவு பசு

க்காவ - றெள்ளிதின் வாணிகங் குயிலுவக் காருகவினை - யொள்ளிய விருபிறப்பாளர்க்கேவல் செயல்''எடு-வது சூத்திரத்தானும், ''கல்லு முலோகமுஞ் செங்கலு மாமும் - மண்ணுஞ் சுதையுந் தந்தமும் வண்ணமுங் - கண்ட சருக்கரையு மெழுகு மென்றிவை பத்தே சிற்பத்தொழிற் குறுப்பாவன'' என்னும். கரு0-வது சூத்திரத்தானு முணர்க. ''புகலெத் தொழிலு மென்றதனுல் மற்றைய அறுபத்து நாலு ஜாதிகளின் தொழில்களையுங்கொள்க.

## முத்திரைமோதிரச்சிறப்பு.

முத்திரை மோதிரச் சிறப்பென்பது :—முத்திரை மோதிரத்தின் பெருமை. அது தொழி னெறி பிறழாமலாளுந்தகைமையோடுந் தரித்தலின், இங்கே தொழினெறி பிறழாமைச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

### கோச்சகம்.

எத்திசைமன்னவராணு முத்திரிக்கு மீதன்றிப்
பத்திமையி லார்க்கந்தப்பரானுலகு முத்திரிக்கும் [ம்
சத்தியம்பொய்யாதுவைகிச்சகம்புரக்கும் வன்னியர்கை
முத்திரையாழிக்குநிகர் மூதக்கீர் மொழியீரே. (சச)

(இ-ள்.) மூதக்கீர் - மேலாம் அறிவினையுடையீர், சத்தியம் பொய்யாது வைகி - சத்தியத்தை யொளிக்காமலிருந்து, சகம் புரக்கும் வன்னியர் - உலகத்தைக்காவல் செய்யும் வன்னியர்களது, கைமுத்திரை ஆழிக்கு - கையில் விளங்குகின்ற முத்திரை மோதிரமானது, எத்திசை மன்னவர் அரணும் உத்திரிக்கும் - எத்திசைகளிலுமுள்ள அரசர்களது நால் வகையரணும் நிலைபெறச் செய்யும், இது அன்றி - இது வல்லாமலும், (அது) பத்திமை இலார்க்கு - அடங்கி நல்லொழுக்கத்தில் நடவாதவர்களுக்கு, அந்தப்பரான் உலகு முத்திரிக்கும் - அந்தப் பரானுலகு (சித்தியாகாத வண்ணம்

அடைத்து.) முத்திரை செய்யும் (ஆகையால்), நிகர் மொழியீர் - ஒப்பு சொல்வீர்களாக. எ-று.

## ஆழிக்கு வேற்றுமை மயக்கம்.

**கருத்து.** வன்னியர்களின் முத்திரை மோதிரமானது பலதிக்குகளிலும் உள்ள அரசர்களின் அரண்களை நிலைக்கச் செய்வதோடும், பக்தியில்லாதவர்கள் சுவர்க்கம் அடையாதபடி அச்சுவர்க்கக் கதவை யடைத்து முத்திரையிடும் என்பதாம்.

## துட்டநிக்கிரகச்சிறப்பு.

துட்ட நிக்கிரச் சிறப்பென்பது :—துஷ்டர்களை யழித்தலின் பெருமை. அது முத்திரை மோதிரந்தரிக்கும் ஆண்டகையார்க்காதலின், இங்கே முத்திரை மோதிரச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்,

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தீட்டார்தமையுஞ் சிவநிந்தை செய்வோரையுஞ்
செங்கோன்முறையேர், பூட்டார்தமையும் பொய்யரை
யும் போர்வெங்களத்துப் போந்துபுறம், காட்டார்தமை
யுங் கள்வரையுங் கலிதீர்ந்திடக்காட்டிய வறத்தை,
நாட்டார்தமையு நானிலத்தி னுட்டார்நவில்பண் ணுட்
டாரே. (சரு)

(இ-ள்.) நானிலத்தில் - இவ்வுலகத்தில், நவில் பண்ணுட்டார் - யாவராலும் சொல்லுகின்றதமிழ் நாடரென்னுஞ் சேர சோழ பாண்டிய வன்னியாள், தீட்டார் தமையும் - ஒழுக்க மில்லாதவர்களையும், சிவ நிந்தை செய்வோர்களையும்- தெய்வ நிந்தை செய்பவர்களையும்,செங்கோன் முறை ஏர்பூட்டார் தமையும் - செங்கோன் முறைப்படி வழக்கம் போல ஏர் பூட்டாத வேளாளர்களையும், பொய்யரையும் - பொய்சொல்

பவர்களையும், வெம்போர்க் களத்து பொருது - வெவ்விய யுத்தகளத்துக்கு வந்து, புறங் காட்டார் தமையும்-முதுகு காட்டாத பகைவர்களையும், கள்வரையும்-திருடர்களையும்,கலிதீர்க்கிடக் காட்டிய அறத்தை காட்டார் தமையும்-(ஏழைகளுக்கு) வறுமைதீர உண்டாக்கிய தருமத்தைக் கெடுத்தவர்களையும் - காட்டார் - தங்கும்படி இடம் கொடார். எ-று.

**கருத்து.** வன்னியர்கள் ஒழுக்கமில்லாதவர்களையும், தெய்வ நிந்தை செய்பவர்களையும், முறைமையாக எருழாத வேளாளர்களையும்,பொய்யர்களையும் எதிர்த்தபகைவர்களையும் திருடர்களையும் தருமத்தை கெடுத்தவர் களையும் இவ்வுலகத்தில் வைக்கமாட்டார்கள் என்பதாம்.

## வாயில்காத்தற்சிறப்பு.

வாயில் காத்தற் சிறப்பென்பது :—வாயில் காத்தலின் பெருமை. அது துஷ்ட நிக்கிரகஞ் செய்யுந் தாமுடையார்க்கே அமைதலின், இங்கே துஷ்ட நிக்கிரகச் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

## கோச்சகம்.

கடிந்தாரைக் களைவனியர் காப்பாளர் சமர்க்களத்தில், மடிந்தாலுஞ் சுவர்க்கமுண்டாம் வாயில்காத்தவா டியில், படிந்தாலுமரசுண்டாம் பகர்வதெவன் பாரிடத்தில், விடிந்தால்வேர் தன்வாயின் மேவாதார் யாருளரே.

(இ-ள்.) பாரிடத்தில் - இவ்வுலகத்தில், கடிந்தாரைக் களைகாப்பாளர் வன்னியர் - துஷ்டர்களைச் சம்மரித்து (உலகத்தைக்) காக்கின்றவர்களாகிய வன்னியர்களது, சமர்க்களத்தில் மடிந்தாலும் - யுத்தகளத்தில் எதிர்த்து இறந்தாலும், சுவர்க்கம் உண்டாம் - சுவர்க்க பதவி உண்டாகும், (அன்றி) வாயில் காத்து அவர் அடியிற் படிந்தாலும் - (அரண்மனை) வாயிலைக்காத்து அவர்களது பாதத்தில் வீழ்ந்து பணிந்துக்

கொண்டிருந்தாலும் - அரசு உண்டாம் - அரசாட்சி கிடைக்கும் (ஆகையால்) பகர்வது எவன்-(இவர்களைப்பற்றி வேறே பன்னிப்பன்னி) சொல்வது என்ன இருக்கிறது, விடிந்தால் வேந்தன்வாயில் மோவாதார் யார் உளர்-சூரிய உதயமானால் அரசன் அரண்மனைவாயிலிற் சேராதவர்கள் யாவரிருக்கிறார்கள் (சொல்வீர்களாக.) எ-று.

**கருத்து.** உலகத்திலியாவர்களும்வன்னியர்களது வாயிற்படி காத்துக்கொண்டிருந்து உயிர்பிழைக்கின்றவர்களாகிறார்களென்பதாம்.

## தொழுதன்முதலியசிறப்பு.

தொழுதன் முதலிய சிறப்பென்பது :—தொழுஞ்செயலோர் முதலாயினோர் சூழ்ந்திருத்தலின் பெருமை. அது பதினெண் பகுதியோராய்ப் பக்கத்திலிருந்து உஜ்ஜீவிக்க வேண்டியவர்களைச் சொல்லுதலின், இங்கே வாயில் காத்தற் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அணங்காற்றருவில் லேந்திமுறையரசாள்வன்னியச்சயதரரை, வணங்கார்யார்க்கை கூப்பார்யார் வாரிசூழும் வையமிசை, இணங்கார் யார்கின் றேத்தார்யா ரேவற்பணிசெய் யார்யார்நன், மணஞ்சார்முற்றங்காத்திருந்து வாழ்நாண்மகிழார் யார்யாரே. (சஎ)

(இ-ள்.) வாரி சூழும் வையம்மிசை - சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்தில், அணங்கு ஆற்று அருவில் ஏந்தி - (பகைவர்கள், துஷ்டர்களுக்கு) அச்சத்தைக் கொடுக்கின்ற அருமையாகிய வில்லைத் தங்கள் கையினிடத்தாங்கி, முறை அரசு ஆள்வன்னியச்சயதரரை - பரம்பரையாக அரசை நடத்திவருகின்ற வன்னிய வீரர்களை வணங்கார் யார் - வணங்காதவர் எவர்கள்கைகூப்பார் யார்-கும்பிடாதவர்கள் எவர்கள்இணங்

கார் யார் - சிநேகத்தைத் விரும்பி யிணக்கஞ் செய்யாதவர்கள் எவர்கள்? நின்று எத்தார்யார் - சந்நதியில் நின்றுக்கொண்டு துதிக்காதவர்கள் எவர்கள், ஏவல் பணிசெய்யார் யார்- ஏவிய பணிவிடைகளைச் செய்யாதவர்கள் எவர்கள்? நல்மணம் சார்முற்றம் காத்து இருந்து நல்ல மங்கலத்தைச் செய்கின்ற அரண்மனை வாயிலில் காத்திருந்து, வாழ் நாண் மகிழார் யார் யார் - தங்களுயிரைக் காப்பாற்றிக் கொள்ளாதவர்கள் எவர்கள் எவர்கள்? எ-று.

கருத்து. இவ்வுலகத்தில் வன்னியர்களை வணங்காதவர்களும், கும்பிடாதவர்களும், சிநேகத்தை விரும்பி இணக்கஞ் செய்யாதவர்களும், துதிக்காதவர்களும், பணிந்து ஏவல் செய்யாதவர்களும், வாயில் காத்திருந்து உயிர் பிழைக்காதவர்களும், இல்லை என்பதாம்.

இதில் தொழுதன் முதலியசிறப்பென்றதனால்அரசர் மூவகையிற்பதினெண்குழூஉ அடங்கிய தென்க. அதாவது மந்திரியர், புரோகிதர், சேனாபதியர், தூதர், சாரணர் என ஐந்தும்? மந்திரியர். கருமாதிகாரர், சுற்றம், கடைகாப்பாளர், நகரமாக்கள் படைத்தலைவர், இவுளிமறவர், யானைவீரர், எனைத்துணைவர்கள் எட்டும்; நட்பாளர், அந்தணாளர், மடைத்தொழிலர், மருத்துவக்கலைஞர், நிமித்திகப்புலர் என ஐந்தும் ஆகபதினெட்டென்க. இவர்களை தி - கஉ - வ - தி "அமாத்தியர் புரோகிதர் சேனாபதியர் - தவாற்றொழிற் றூதர் சாரணரென்றிவை அரசர்க்காகு மைம்பெருங் குழுவும் - காரணத்திளைஞருங் கமவிதிகாரருங் - கனகசுற்றமுங் கடைகாப்பாளரும் நகரமாக்களு நனிபடைத் தலைவரு - மிவுளிமவரும் யானைவீரரும் மடைத்தொழிலாளரும் மருத்துவக்கிளைஞரு - மாசர்க்கெண் பெயராகு மென்ப - வடுதநட்பாளரும் மடைத்தொழிலாளரும் - மருத்துவக்கிளைஞரும் நிமித்தகாரரும - நீணில வேந்தர்க் குரைத்த வைம்பெய - ருறுதிச்சுற்றமு முரைத்த முப்பாலு - முயர்குடை வேந்தர்க்குப் பகுத்த பதினெண்கிளைப்

பாலோரே" என்னும் கருசு - வது சூ - க. இதனல் வணங்குவோர்களேயும், கைகூப்புவோரையும், எவல் கேட்போரையும், துதிப்போரையும் வாயில் காப்போரையும், அவரவர்கள் தகைமைக்குத் தக்கதாக வமைத்துக் கொள்க. தனித்தனி ஒவ்வொரு சிறப்புங்கூறினென்னேயோ. வெனின்! இபபிரபந்தம் எழுபதென்னும் வரையிகந்து படுமென்னுங் கருத்தால்சுருங்கச் சொல்லவென்னும் அழகுபற்றி இங்ஙனம் கூறினரென்க.

## செல்வாக்கின் சிறப்பு.

செல்வாக்கின் சிறப்பென்பது:—செல்வாக்கின் பெருமை. அதுதொழுதன் முதலிய அங்கமுடைமையால் பயன் படுதலின் இங்கே தொழுதன் முதலிய சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

## கோச்சகம்.

பாவசையு நாவலர்பால் பத்திமிக வைத்துதவும்,
பூவசையு மணிமார்பர் புகழினுக்கோர் நிகரின்றுன்,
மாவசையாப் பெருஞ்செல்வர் மாதிரங்காக்கும் வனியர், நாவசைய நிரந்தரமும் நாடசையா திருந்திடுமோ.

(இ-ள்.) பா அசையும் பாவலர் பால்மிகப் பத்திவைத்து உதவும் - பாட்டுகளேச் சொல்லும் (நாவினேயுடைய) வித்வான்களிடத்து மிக்க அன்புவைத்து உதவுகின்ற, பூ அசையும் மணிமார்பர் - மாலேபுரளும் அழகிய மார்பினேக் கொண்டவர்களும், மா அசையாப்பெருஞ் செல்வர் - இலக்ஷுமி நீங்காத ஸர்வ ஐசுவரியங்களேயு முடையவர்களும், மாதிரம் காக்கும் வனியர் - உலகத்தைக்காவல் செய்கின்றவர்களுமாகிய வன்னியர்களது, புகழினுக்கு ஓர் நிகர் இன்று - கீர்த்திக்கு வொருஒப்புங் கிடையாது (ஆகையா் விவர்களது) நா அசைய - நாவானது அசைய, நிரந்தரமும் நாடு அசையா

திருந்திடுமோ - எப்பொழுதாகிலும் நாடசையா திருக்குமா? (சொல்லீர்களாக.) எ-று.

கருத்து. வன்னியர்கள் நாவசைய நாடசையும் என்பதாம்.

இதில் பத்திவைத்தற்கு ஆதாரமாகிய இடம் இதயமாதலின் "பூவசையு மணிமார்பர்" என்றார் என்க.

## புகழ்ச்சிறப்பு.

புகழ்ச்சிறப்பென்பது:—கீர்த்தியின் பெருமை அது செல்வாக்கினதலின், இங்கே செல்வாக்கின் சிறப்புக்குப்பின் வைத்து இரண்டு கவிகளாற்கூறினர்.

ஆந்துணையாம் வன்னியர்போ லார்துணைப்பட்
டாதரிப்பார், போந்தரிகள் வணங்குமிவர் புகழ்சிறி
தோயாம்புகழ்தற், கேந்துகர மீரண்டினும் பொன்னி
லக்கமறச்சொரியினுமிவ், வேந்தர்புகழ்க்கிணைநாவால்
வேறுபுகழ் கூறேமால். (சகூ)

(இ-ள்.) ஆம் துணை ஆம் - தகுதியினையுடைய வற்றிற்குத் துணையாகின்ற, வன்னியர்போல் - வன்னியரைப்போல, துணைப்பட்டு ஆதரிப்பார் ஆர் - துணைப்பட்டு ஆதரிப்பவர்கள் யாவர்? (ஒருவருமில்லை யென்றபடி) யாம்புகழ்தற்கு-எம்மாலே புகழ்ந்து சொல்வதற்கு, அரிகள் போந்து வணங்கும் இவர்கள் புகழ்சிறிதோ-பகைவர் வந்து வணங்கும் இவ்வன்னியர்களது புகழ் கொஞ்சமாகவா இருக்கிறது? (ஆகையால்) ஏந்து கரம் இரண்டினும் பொன் இலக்கம் அறச் சொரியினும் ஏந்தாநின்ற எமது கையிரண்டினும் (வழக்கமாகக் கவிக்கு ஆயிரம் பொன்னென்றும் முறையை நீக்கி) பொன்னைக் கணக்கில்லாது (மழைபோலும்) பெழிந்தாலும், இவ்வேந்தர் புகழ்க்கு இணை நாவால் வேறு புகழ் கூறேம் - இவ்வரசர்கள் புகழுக்கு இணையாக எந்நாவினல் வேறு ஒருவர் புகழையும் சொல்லமாட்டேம். எ-று.

ஆல் - அசை.

**கருத்து:** வன்னியர்களைப்போலும் துணைப்பட்டு ஆதரிப்பவர் உலகத்தில் ஒருவருமில்லை யாதலால் எமது கைகளில் கவியொன்றுக்கு ஆயிரம்பொன்னென்னும் வரையின்றிப் பொழிந்தாலும் இவ்வரசர்கள் புகழுக்கிணையாக வேறு ஒருவர் புகழையுங் கூறமாட்டேம் என்பதாம்.

இதில் "இனி இதுபோலும் வேறே ஒருவரையும் பாடமாட்டேனென்று சபதமும் செய்தாராயிற்று. ஆயிரம்பொன்னென்னும் வரையறையைஇவரது சரித்திரங்களினும் வாழ்த்தின் முதற்கவியினுங் காண்க.

## இதுவும் அது.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வளமருவு மங்கையர்கோன் சொலத்தகுபல் லவராயன் மரபிற்றோன்றிக், களமருவு கறையுடைய கண்ணுதல்கச் சியின்வாழே கம்பரேசற், குளமருவு மன்பினரா யொளிர்மகுட மணிப்பொற்றே ருதவிமேனாள், தளமருவு தாமரைபோன் முகவணியர் படைத்தபுகழ் சாற்றற் பாற்றே. (௫௦)

(இ-ள்.) மேனாள் - ஆதியில், தளம் மருவு தாமரைபோல் முகம் வனியர் - இதழ் பொருந்தியதாமரை மலர்போலுங் குளிர்ந்த முகத்தினையுடைய வன்னியர்கள், வளம் மருவு மங்கையர்கோன் சொலத்தகு பல்லவராயன் மரபில் தோன்றி - வளப்பத்தைக்கொண்ட திருமங்கை யாழ்வாரால்சொல்லுந் தகுதியினையுடைய பல்லவராஜன்வமிசத்தில் உதித்து, களம் மருவு கறைஉடையகண்ணுதல் கச்சியின்வாழ் ஏகம்பரேசற்கு - கண்டத்தினிடத்து பொருந்திய விஷக்களங்கத்தினையும் நெற்றிக்கண்ணினையு முடைய கச்சியின் வாழ்வாகிய ஏகாம்பர நாதர்க்கு, ஒளிர் மகுடம் - விளங்காநின்ற இரத்தின கிரீடமும், மணிப்பொற் றேர் - அழகிய

இரத்தின இரதமும், உதவி - கொடுத்து, படைத்த புகழ் அடைந்த புகழை, சாற்றல் பாற்றே - சொல்லும் பகுதியினை யுடையதா? (சொல்வீர்களாக.) எ-று.

**கருத்து,** ஆதியில் இவ்வன்னியர்கள் திருமங்கையாழ் வாரால் சொல்லிய பல்லவராஜன் வம்மிசத்தில் தோன்றின வர்களாகி, ஏகாம்பரநாதற்கு கிரீடம்தேர் முதலியவைகள் கொடுத்து புகழ் பெற்றதை இவ்வளவென அளவிடக்கூடா து என்பதாம்.

இதனால், இவ்வன்னியர்கள் விஷ்ணுவாலய சிவாலய தருமங்கள் ரொம்பவும் பிரபலமாக நடத்துகின்றவர்களெனக் குறிப்பிட்டார்.

இதில் "வளமருவு மங்கையர்கோன் சொலத்தகு பல்ல வராயன் மருப்" என்றதற்கு திராவிடவேதமாகிய நாலாயிரப் பிரபந்தம் திருமங்கையாழ்வார் திருவீய் மலர்ந்தருளியஷட் பிரபந்தத்துள் பெரிய திருமொழி பரமேசுவர விண்ணகரம் பரமபாத விஷயம் பல்லவனும் சோழனுமென்பார் அநுகூல விர்த்திகளைப் பண்ணும் பரமேசுவர விண்ணகரத்தை யனுப வித்துப் பேசும் பாசுரங்கள்.

"சொல்லுவன் சொற்பொருடானவையாய்ச் சுவையூ றொலி நாற்றமுந் தோற்றமுமாய், நல்லரனரனன் றன்முக னுக்கிடந்தான் றடஞ் சூழ்ந்தழகாயகச்சி, பல்லவன் வில்லவ னென்றுலகிற் பலராய பலவேந்தர்வணங்கு கழற், பல்லவன் மல்லையர்கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரமிதுவே"

இது - க - வது பாசுரம்;

திண்படைக் கோளரியினுருவாய்த் திறலோனகலஞ் செருவின் முன்னாட்,புண்படப் போழ்ந்த பிரானதிடம்பொரு மாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி,வெண்குடை நீழற் செங்கோன டப்ப விடைவேல் கொடி வேற்படை முன்னுயர்த்தப், பண் புடை பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகர மிதுவே"

இது - சுஉ-வது பாசுரம் மற்றைய பாசுரங்களை அந்நூலைக் கொண்டு அறிந்து கொள்க. "ஒளிர் மகுட மணிப்பொற் றேருதவி" என்றதற்கு, ஏகாம்பரச் சம்பன் அல்லது ஏகாம் பரச்செம்பியன் என்னும் பல்லவமகாராஜன் முன்னிலையில் இரட்டைப் புலவர்கள் அரங்கேற்றிய ஏகாம்பரநாதர் உலா "சம்புகுலத் தொருவன் சாற்றுகைக்கா மென்றளித்த - செம் பொன் மணிமகுடம் சேர்வித்து" என்னும் சுக-வது கலி வெண்பாவானும், "வடித்த சுடர்வேற்சம்பன் வாழ்மல்லி நாதன் - கொடுத்த திருத்தேர்மேற்கொண்டு" என்னும் கO௨ வது கலிவெண்பாவானும் உணர்க. * சம்புகுலத்தவன் சம் பன் அது சம்பியனெனினும் செம்பியனெனினும் இழுக்கா; என்னை? ஜபம் செபம், ஜயம் செயம் கந்தகம் கெந்தகம் என மரீஇ வழங்குவனபோல்; ஜம்புகுலத்தவன் சம்பன் என்னும் மொழியானது இயதோன்றி, செம்பியன் என மரூஉ மொ ழியாயதென் உணர்க. ஏகாம்பரநாத ருலாவை ஏகாம்பரச் செம்பியன் காலத்தில் இரட்டைப் புலவர்கள் அவன் முன் னிலையில் அரங்கேற்றியதென்பதைத் தொண்டமண்டல சதகம்.

"மேதைப்புலவரெண் ணேகாம்பர சம்பு மெச்சநெடுங்
காதைப் புலவ ரிரட்டையர் பாடுங்கலம் பகமு
மோதற் கரியநல் லேகம்ப வாண ருலாவு மந்த
மாதைப்பனுவலும் பாராட் டிடுந்தொண்ட மண்டலமே"

என்னும் அகூ -வது கவியானுணர்க.

## மாசகற்றற் சிறப்பு.

மாசகற்றற் சிறப்பென்பது:—குற்றம் நீக்குதலின் பெரு மை. அது புகழ்தங்குதற்கு இடமாதலின், இங்கே புகழ்ச் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

---

* சுவாயம்பு குலத்தவன் சம்பனசெம்பியன் என மரீஇய வென்பாரும் உளர். அப்படியமையினும் அமைக்க.

## வேறு.

மின்னுமிரவி தனிற்றோன்றும் வேந்தர் குலத்தில்
வருமாசும், மன்னு மதியந்தனிற்றோன்று மன்னர்
குலத்தில் வருமாசுந், துன்னுந்திரைத்தண் கடலுல
கிற்றொலைக்குந்தூய்தாங் கனற்றோன்றும், மன்னுபுகழ்
கொளரசர்களே பார்க்கின் மாசு தீர்ந்தாரே. (௫0)

(இ-ள்.) துன்னும் திரைத் தண் கடலுலகில் - நெருங்கிய அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில், மின்னும் இரவிதனில் தோன்று வேந்தர் குலத்தில் வருமாசும் - பிரகாசிக்கின்ற சூரியனிடத்துத் தோன்றிய அரசர் குலத்தில் உண்டாகுங் குற்றத்தையும், மன்னு மதியம் தனில தோன்றும் மன்னர் குலத்தில் வரு மாசும் - நிலைபெற்ற சந்திரனிடத்துத் தோன்றிய அரசர் குலத்தில் உண்டாகுங் குற்றத்தையும், தொலைக்கும் - நீக்காநின்ற, தூய்து ஆம் கனல் தோன்று - பரிசுத்தமாகிய அக்கினியிடத்துத் தோன்றியதாகப், பன்னும் புகழ்கொள் அரசர்களே - சொல்லுகின்ற புகழினைக் கொண்ட அரசர்களே, பார்க்கின் மாசுதீர்ந்தார் - ஆராயும் பொழுது குற்றந்தீர்ந்தவர்களாகின்றார்கள். எ-று.

கருத்து. சூரியகுலத் தவர்களினும், சந்திரகுலத்தவர்களினும், அக்கினிகுலத் தவர்களே பரிசுத்த முடையவர்கள் என்பதாம்.

ஈதில் ஒன்னியரென எடுத்துக் கொண்டதற்கு விசேடம் சென்னோர் என்க.

## பெருந்தன்மையின் சிறப்பு.

பெருந்தன்மையின் சிறப்பென்பது :— பெருந்தன்மையின் பெருமை. இது குற்றத்தை நீக்குதலா லாதலின்; இங்கே மாசகற்றற் சிறப்புக்குப் பின் வைத்து இரண்டு கவிகளால் கூறினார்.

கலையான் மிக்கோ ருலகளிக்குங் கருத்தான் மிக்கோர் கனகமணி, மலையான் மிக்கோர் நிலவுகுடை வளத்தான் மிக்கோருடை மாறு, நிலையான் மிக்கோ ரினிதோங்கு நெறியான் மிக்கோ ரிகல்வெல்லுஞ், சிலையான் மிக்கோர் வன்னிமன்னர்க் கெவர்தான் மிக்கோர் தெளிதரினே. (ருஉ)

(இ-ள்.) தெளிதரின்-ஆராயுங்கால், கலையால் மிக்கோர்-பதினெண் வித்தைகளாற் சிறந்தவர்களும், உலகு அளிக்கும் கருத்தால் மிக்கோர் - உலகத்தைக் காக்குங் கருத்தினாற் சிறந்தவர்களும், கனகமணி மலையால் மிக்கோர் - அழகிய பொன் மலையினாற் சிறந்தவர்களும், நிலவு குடைவளத்தால் மிக்கோர் -விளங்குகின்ற குடைவளத்தினால் சிறந்தவர்களும், இனிது ஓங்கு நெறியால் மிக்கோர்- இனிதாக உயரும் ஒழுக்கத்தினாற் சிறந்தவர்களும், இகல் வெல்லும் சிலையால் மிக்கோர் - பகையை வெல்லும் வில்லினால் சிறந்தவர்களும், (உடையவர்களாதலின்) வன்னிமன்னர்க்கு - இவ்வன்னியரென்னும் அரசர்களுக்கு, எவர் தான் மிக்கோர் - யாவர் தான் சிறந்தவர்கள் (சொல்வீர்களாக.) எ-று.

கருத்து. வன்னியர்கள் முறைபோலும் ஒவ்வொரு விஷயங்களினும் மேலானவர்கள் என்பதாம்.

இதில் பதினெண் வித்தைகளாவன:—வேதம் நான்கு, அங்கம் ஆறு, மீமாம்சை, நியாய நூல், புராணாதிகள், தரும சாத்திரங்கள் ஆகபதினான்கும்; ஆயுர்வேத மென்கிற வயித்திய சாஸ்திரம், தனுர் வேதம் என்கிற ஆயுதசாஸ்திரம், காந்தர்வ வேதம் என்கிற சங்கீத சாஸ்திரம், அர்த்த சாஸ்திரம் என்கிற இராஜ நீதி சாஸ்திரம் ஆக நான்கும்; சேர்ந்து பதினெட்டென்க. "கலையான் மிக்கோர்" என்றதற்கு கலைக்கியானங்கள் அறுபத்து நான்கிலுஞ் சிறந்தவர்களும் எனவும் "கனகமணி மலையான் மிக்கோர்" என்றதற்கு சுவர்ணம்,

இரத்தினம், மலை முதலிய வளங்களில் சிறந்தவர்களும் என வும் பொருள் கொள்வாரும் உளர். அப்படி கொள்ளினுங் கொள்க. கலைக்கியானங்கள் அறுநான்கும் இவர்களுக்கு உண்டென்பதை திருவிளையாடல் மாறியாடின படலத்தில் காண்க. பதினெண் வித்தைகளை விஷ்ணு புராணத்துட் காண்க.

இதுவுமது

ஆக்கமுன்னிடி லுயரறத்தை யாக்குவர்
போக்க முன்னிடிற் பொருந்தாரைப் போக்குவர்
காக்கமுன்னிடிற் கடனிலத்தைக்காப்பர்நல்
லூக்கமுன்னிடு குணத்தோர் பண்ணுடரே. (ருரு)

(இ-ள்). பண்ணுடர் - தமிழுடரென்னுஞ் சேர சோழ பாண்டியராகிய வன்னியர்கள், ஆக்க முன்னிடின் - ஆக்க வேணுமென நினைத்தால், உயர் அறத்தை ஆக்குவர் - உயர் வாகிய தருமத்தை உண்டாக்குகிறார்கள், போக்க முன்னி டில் - அழிக்க வேணுமென நினைத்தால், பொருந்தாரைப் போக்குவர்-பகைவர்களை அழிக்கிறார்கள், காக்க முன்னிடில் இரக்ஷகஞ் செய்ய வேணுமென நினைத்தால், கடல் நிலத் தைக் காப்பர் - சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்தை இரக்ஷிக் கிறார்கள், (ஆகையால் எந்த விஷயத்திலும்) ஊக்கம் முன் னிடு குணத்தோர் - மன வெழுச்சியை முன்னிட்ட குணத் தினையுடையவர்களாகிறார்கள். எ-று.

முன்னல் இடின் என்றது முன்னிடின் எனவாயது: நினைத்தல்தரின் எனப்பொருள்.

**கருத்து** வன்னியர்கள் ஒவ்வொரு விஷயத்திலும் மன வெழுச்சியை முன்னிட்ட குணத்தினையுடையவர்களாகவே யிருக்கிறார்கள் என்பதாம்.

## இதயவண்மைச் சிறப்பு.

இதய வண்மைச் சிறப்பென்பது:—இதய வளத்தின் பெருமை, அது பெருந்தன்மைக்கு அவசியம் வேண்டும் ஆதலின், இங்கே பெருந்தன்மையின் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சமயவளமுஞ் சிவனுமைமா லறத்தின் வளமுங்
குலவளமு,மமையு நிலத்தின் வளமு முழவாளர் வளநல்
லறவளமுந், தமையொப் பிலர்கற் புறுவளமுஞ் சகல
வளமுந்தமிழ்வேந்த, ரிமையப்பொருப்பர் பண்ணுட
ரிதயவளத்தின் றிறத்தானே (௫௪)

(இ-ள்). தமிழ் வேந்தர் இமயப் பொருப்பர் பண்ணுடர் - தமிழ் அரசர்களும் இமய மலையையுடையவர்களும் ஷை தமிணுடர்களுமாகிய சேர சோழ பாண்டிய வன்னியர் களினது, இதயவளத்தின் திறத்தால் - இதய வண்மையின் திறத்தினுல், சமயவளமும் (தாங்கள் வணங்குகின்ற) சமயங்களின் வளங்களும், சிவன் உமைமால் தலத்தின் வளமும் - சிவன் பார்வதியாகிய காமாக்ஷி விஷ்ணு இவர்கள் வசிக்கின்ற ஸ்தலமாகிய தங்களுக்குரிய காஞ்சீ நகரத்தினது வளமையுங், குலவளமும் - இவர்களது குலத்தின் வளமையும், அமையும் நிலத்தின் வளமும் - பொருந்திய இவர்கள் அரசுக்குரிய நாட்டினது நிலவளமையும், உழவாளர் வளம்- (அந்த நிலத்தைப் பயிரிடப்பட்ட குடிகளாகிய) வேளாளர்களுடைய வளமையும், நல் அற வளமும் - நல்ல தருமத்தின் வளமையும், தமை ஒப்பிலர் கற்பு உறு வளமும் தங்களுக்கொப்பில்லாத கற்புடைய ஸ்திரீகளின் வளமையும், சகல வளமும்-(இவைமுதலாகிய) சகல வளமைகளையும் (உடையதுவாயிருக்கின்றது) இவ்விராஜ்யம் எ-று.

கருத்து:—வன்னியர்களது இதயவண்மையால் சகல வளப்பங்களும் நிறைந்திருக்கின்றது என்பதாம்.

இதில், செல்வம், விளைவு, பல்வளம், செங்கோன்மை, கொல்குறும்பின்மை, பிணியின்மை என நன்னாட்டமைதி ஆறையுங்காண்க. இவைகளை திவாகரம் தி-கஉ-தி. "செல்வம் விளைவு பல்வளஞ் செங்கோன்மை - கொல்குறும் பின்மை கொடும்பிணியின்மை இவ்வயினாறு நன்னாட்ட மைதி" என்னும் அகூ-வது சூத்திரத்தானும் காண்க. அன்றியும் அரசியல் ஆறனுள் குடியும் கூழும் அடங்கிய தென்க "தமிழ் வேந்தர்'' என்றதனால் தமிழைச் சங்கமுதலிய வைத்து தமிழ் நாட்டின் பரிபாலிக்கின்றவர்கள் என்க. நாடு என்னை! தமிழ் 'வடவேங்கடந் தென்குமரியா யிடை தமிழ்க் கூறும் நல்லுலகம்" எனினும்,

"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகங், கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம் வங்கங், கங்கம் மகதங் கடாரங் கௌடங் கடுங்குசலந், தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதினேழ்புவி தாமிவையே"

என்னும்பதினேழ் நிலத்தால் சூழப்பெற்றதெனினும்,

"தென்பாண்டி குட்டங்குடங்கற்கா வேண்பூழி
பன்றியருவவதன் வடக்கு—நன்றாய்
சீதமலாடு புன்னாடு செந்தமிழ்சே
ரேதமில் பன்னிரு நாட்டெண்."

எனக்கொடுந்தமிழ் நாடுகள் பன்னிரண்டுடன் செந்தமிழ் நாடு ஒன்றையுஞ் சேர்க்கப் பதின்மூன்று நாட்டின் பகுதியினையுடைய தெனினும் ஆமென்க. அது "பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே, யங்கதமுதுச்சொலோடவ்வேழ் நிலத்தும், வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின், நாற்பெயரெல்லை யகத்தவர் வழங்கும், பாட்டின் வழிய தென்மனார் புலவர்."

என்றார் ஆதலின் சேரசோழ பாண்டியராகிய மூவேந்தருள்ளும் அடங்குமென்க. இம்மூவேந்தரும் வன்னியரென்

பார். "தமிழ் வேந்த ரிமயப்பொருப்பர் பண்ணுடர்" என்றாரென்க.

இதனாலேயே "கம்பசூத்திரம் கம்பசூத்திரமென" வழங்கும் வழக்கம்போல் தமிழும் தனது பெயரை வேந்தர்களுக்குக் கொடுத்துத் தமிழ்வேந்தரென்றாக்கி, வேந்தர்களுடைய பட்டப்பெயர் பலவினுளொரு பெயரைத் தான்வகித்துப் "பள்ளித்தமிழ்" என பண்டிதாள் பாமராள் யாவரும் அவரவர்கள் தகைமைக்குத் தக்கதாக வழங்க உலகத்தில் விளங்கிக் கொண்டிருக்கின்றதென்க.

இவ்வேந்தர்களின் பட்டப்பெயர்க ளாவன; சேரனர், சோழனர், பாண்டியனர், உடையார், நயனர், * கண்டர், பள்ளிகள், சாமந்தர், பல்லவர், அஞ்சாதசிங்கம், கங்கணவுடையார், மழுவர், பொறையர், அரசுபள்ளி, இராயர், படையாக்ஷியர், நாயகர், கிடாரங்காத்தவர், நீலங்கிரியார், வாளண்டையார், வீரமிண்டர், வல்லமையுடையார், இராஜாளி, சமுக்ஷியர், தந்திரியார், இரட்டிகள், துரைகள், பண்டாரத்தார், பூபதிகள், பரமேச்வரனர், காளிங்கராயர், சம்புராயர், முதலியவைகள் என்க. இவைபோலும் இன்னும் அநந்த பட்டப் பெயர்களை அநுபோகத்திற் கண்டுணர்க.

## இராஜசமுகச் சிறப்பு.

இராஜசமுகச் சிறப்பென்பது:—இராஜசமுகத்தின் பெருமை. அது இதயவளத்தி னுள்ளதலின், இங்கே இதயவண்மைச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

வானோர் வியக்குஞ் சமுகமுந்து மறையோர் வாழ்த்துஞ் சமுகமலர்த், தேனார்ந் திருக்குஞ் சமுகமன்னர் திறைக ளளக்கும் சமுகம்விழி, மானார் நடிக்குஞ்சமுக

* இந்த கண்டர் என்னும்பதமே கவுண்டர் என நிற்கின்றது.

மதி வல்லோர் துதிக்குஞ் சமுகமொன்னு, ராஞு திறை
ஞ்சுஞ் சமுகம்வன்னி யரசர்சமுக மதுதானே. (௫௫)

(இ-ள்) வானோர் வியக்கும் சமுகம் - தேவர்கள் சந்தோஷிக்கின்ற சமுகமும், முது மறையோர் வாழ்த்தும் சமுகம் - பழமையாகிய வேதப்பிராமணர்கள் ஆசீர்வாதஞ் சொல்லுகின்ற சமுகமும், மலர்த் தேன் ஆர்ந்திருக்கும் சமுகம் - இலக்ஷுமி நாளு நிறைந்திருக்கின்ற சமுகமும், மன்னர் திறைகள் அளக்கும் சமுகம் - அரசர்கள் கப்பம் என்னும் அரசிறைகளை அளக்கின்ற சமுகமும், விழிமானர் நடிக்கும் சமுகம் - மான்போன்ற விழிகளையுடைய பெண்கள் நடனஞ் செய்கின்ற சமுகமும், மதிவல்லோர் துதிக்கும் சமுகம் - அறிவில் வல்லவர்கள் துதிக்கின்ற சமுகமும், ஒன்னார் ஆனது இறைஞ்சும் சமுகம் - பகைவர்கள் தமது உயிர் கெடாது நிலை பெறும்படி வணங்குகின்ற சமுகமும், (ஆகின்ற தெதுவோ) அது தான் வன்னி அரசர் சமுகம் - அது தான் வன்னியரென்னும் அரசர்கள் சமுகமாகும். எ-று.

கருத்து. தேவர்கள் வியக்கின்றதும், பிராமணர்கள் வாழ்த்துகின்றதும், இலக்ஷுமி நிறைந்திருக்கின்றதும், அரசர்கள் கப்பங்கள் செலுத்துகின்றதும், பெண்கள் நடிக்கின்றதும், புலவர்கள் துதிக்கின்றதும் பகைவர்கள் வணங்குகின்றதும், ஆகிய சமுகம் எதுவோ அதுதான் வன்னியரென்னும் அரசர்கள் சமுகம் என்பதாம்.

## பதியிருத்தற் சிறப்பு.

பதியிருத்தற் சிறப்பென்பது:-நகரிற்றங்குதலின் பெருமை. அது சமுகம் கொடுத்தற்குச் சிறத்தலின், இங்கே இராஜ சமுகச்சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

## கோச்சகம்.

பண்ணுடைர் தாமதுபெரும் பதியிருப்ப தாவிமையோர்க்
கெண்ணார்ந்தசிறப்பிருக்கு மிம்பர்மனு முறையிருக்குங்

கண்ணுமுத் தமிழிருக்குங் கற்றோர்க்குப் புகழிருக்கும்
விண்ணார்ந்த மழையிருக்கு மிடியிருக்க மாட்டாவே. ()

(இ-ள்.) பண்ணுடார் - தமிணுடரென்னுஞ் சேர சோழ பாண்டிய வன்னியர்கள், தமது பெரும்பதி இருப்பதால் - தமது பெரிய பதியிருக்குந் தன்மையினால், இமையோர்க்கு எண் ஆர்ந்த சிறப்பு இருக்கும் - தேவவுலகத்தவர்களுக்கு எண்ணிறைந்த சிறப்புகளிருக்கும், இம்பர் மனுமிறை இருக்கும் - பூவுகலகத்தவர்களுக்கும் மனுதரும சாஸ்திர முறைமையிருக்கும், முத்தமிழ் கண்ணு இருக்கும் - இயல் இசை நாடகம் என்னும் மூன்று தமிழும் பெருமையாக விருக்கும், கற்றோற்குப் புகழ் இருக்கும் - (அம்முத்தமிழையும் படித்த) வித்வான்களுக்கும் கீர்த்தி இருக்கும், விண் ஆர்ந்த மழை இருக்கும் - ஆகாயத்தில் பரவி உலகு செழிக்கும்படி சொரிகின்ற மழைத்துளிகளும் இருக்கும், (ஆனால்) மிடி இருக்க மாட்டா - தரித்திரமென்பது மாத்திரம இருக்க மாட்டாது. எ-று. எ. அசை.

கருத்து. வன்னியர்கள் பதியிருத்தலால் தரித்திரமென்பது மாத்திரம் இருக்கமாட்டாது என்பதாம்.

### மன்னர் சூழ்தற் சிறப்பு.

மன்னர் சூழ்தற் சிறப்பென்பது :— அரசர்கள் சூழ்ந்து கொள்ளுதலின் பெருமை. அது பதியிருத்தலினு லாதலின், இங்கே பதியிருத்தற் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

பொன்னணையு மரதனம்போற் புகழணையும் பெரு
நிதிபோன், மன்னணையு நெடும்படைபோன் மலரணையு
மளியினம்போற், றன்னிகரா ரணத்தழலிற் சகலகலை
யுடனுதித்த, மன்னரையே மன்னரெலா மதித்தணைந்து
வாழ்வாரே. (நஎ)

(இ-ள்.) பொன் அணையும் அரதனம்போல் - பொன்னைச் சேர்ந்திருக்கின்ற இரத்தினம்போலவும், புகழ் அணையும் பெருநிதிபோல்-புகழைச்சேர்ந் திருக்கின்ற பெரிய திரவியத்தைப்போலவும், மன் அணையும் நெடும்படைபோல் - அர

சனைச் சேர்ந்திருக்கின்ற நீண்ட படைகளைப்போலவும், மலர் அணையும் அளி இனம்போல் - மலரைச் சேர்ந்திருக்கின்ற வண்டுக் கூட்டங்களைப் போலவும், தன் நிகர் ஆர் என - தனக்கு ஒப்பு ஆர் ஒருவருமில்லையென்று சொல்லும்படி, தழலில் சகல கலையுடன் உதித்த மன்னரையே - அக்கினியினின்றும் சர்வ கலைகளோடும் பிறந்த அரசர்களையே, முன்னரெல்லாம் மதித்து அணைந்து வாழ்வார் - அரசர்கள் எல்லாம் மதித்துச் சேர்ந்திருந்து வாழ்கின்றார்கள் எ-று.

**கருத்து.** வன்னியர் என்னும் அரசர்கள் அவ்வரசர்களுக்குள்ளாகவே ஒரு வரை யொருவர் மதித்துச் சேர்ந்திருந்து வாழ்கின்றார்கள் என்பதாம்.

## மொழிதவறாமைச் சிறப்பு

மொழிதவறாமைச் சிறப்பென்பது :—சொற்றவறாமையின் பெருமை. அது மன்னர்சூழ்தற்குக் கருவியாதலின், இங்கே மன்னர்சூழ்தற் சிறப்புக்குப் பின்வைத்துக் கூறினார்.

விண்ணொளிர்வெங் கதிரொளியும் விதுவொளியும்
விளக்கொளியுந், தண்ணொளிகான் மணியொளியுந் தகை
சான்ற வெளியாமோ, கண்ணொளியா யிறைவனியர்
காத்தருள் பொய் யாவொளியே, மண்ணொளியா
வெளியெனமா மறையொளியா வழுத்தலினே. (ருஅ)

(இ-ள்.) கண் ஒளி ஆய் உறை வனியர் - கண்ணின் சிறுமணி ஒளியென எவ்வுயிரையும்நினைத்துக்காத்துறைகின்ற வன்னியர்கள், காத்து அருள் பொய்யா ஒளியே - தம்மைக் காத்துச் சொல்லுகின்ற மொழி தவறாமையாகிய வொளியே, மண் ஒளியா ஒளி என் - மண்ணில் மறையாத ஒளியென்று, மறை ஒளியா வழுத்தலின் - வேதங்கள் இரகசியமாகச் சொல்லுகின்றதனால், விண் ஒளிர் வெம் கதிர் ஒளியும் - ஆகாயத்தின்கண் விளங்குகின்ற வெவ்விய சூரியனுடைய வொளியும் விது ஒளியும் - (இரவில் ஒளி கொடுக்கின்ற) சந்திரனுடைய வொளியும், விளக்கு ஒளியும் - விளக்கினுடைய வொளியும்,

*தண் ஒளி கால் மணி ஒளியும்* - குளிர்ந்த கிரணத்தைக் கக்குகின்ற இரத்தினத்தினுடைய வொளியும், *தகை சான்ற ஒளி ஆமோ* - பெருமைதங்கிய வொளியாகுமா? [இவைகள் மண்ணில் மறையுந் தன்மையுடையவை யென்றபடி.] எ-று.

**கருத்து.** வன்னியர்களது பொய்யாமை என்னும் ஒளியானது சூரியன், சந்திரன், விளக்கு, இரத்தினம் இவைகளி னொளிகளைப்போல மறையாத் தன்மையுடையதாக விருக்கின்றது என்பதாம்.

நாயனாரும் "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் - பொய்யா விளக்கே விளக்கு" என்றாரென்க.

## சாந்த முதலியவற்றின் சிறப்பு.

*சாந்த முதலியவற்றின் சிறப்பென்பது:*—சாந்த முதலியவற்றின் பெருமை. அது மொழிதவறாமைக்குச் சிறந்த உருவாதலின், இங்கே மொழிதவறாமைச் சிறப்புக்குப் பின் வைத்து கூறினார்.

சாந்தமிரட் சகத்தாலுந் தகைபெறுவை பவத்தாலும்
ஆர்ந்தபுய பலத்தாலு மழகமைந்த திறத்தாலும்
ஏந்துபுக ழரன்மாலிந் திரன்குகன்வே ளெனவன்னி
வேந்தர்சிறந் திருப்பதையிம் மேதினியே விளம்பிடுமால்.

(இ-ள்.) வன்னிவேந்தர் - வன்னியரென்னும் அரசர்கள், *சாந்தம் புகழ் ஏந்து அரன் எனவும்*-சாந்தத்தால் புகழினைக் கொண்ட சிவபிரான் எனவும், *இரக்ஷகத்தால் மால் எனவும்*-இரக்ஷகத்தினால் விஷ்ணு எனவும், *தகைபெறு வைபவத்தால் இந்திரன் எனவும்* - பெருமையையுடைய வைபவத்தினால் இந்திரன் எனவும், *ஆர்ந்த புய்பலத்தால் குகன் எனவும்*-நிறைந்த புயபலத்தினால் சுப்பிரமணியன் எனவும், *அழகு அமைந்த திறத்தால்வேள் எனவும்* - அழகு பொருந்திய தன்மையினால் மன்மதன் எனவும், *சிறந்திருப்பதை* - சிறந்திருக்கின்றதை, *இம்மேதினியே விளம்பிடும்*- இவ்வுலகமே சொல்லும். எ-று. ஆல் - அசை.

கருத்து. வன்னியர்கள் சாந்தத்தால் சிவபிரானெனவும், இரக்ஷகத்தால் விஷ்ணு வெனவும், வைபவத்தால் இந்திரனெனவும், புயபலத்தால் சுப்பிரமணியனெனவும், அழகால் மன்மத னெனவும் சிறந்து விளங்குந் தன்மையை இவ்வுலகமே சொல்லுகின்றது என்பதாம்

## கோடைவளத்தின் சிறப்பு.

கொடை வளத்தின் சிறப்பென்பது:—கொடை வளத்தின் பெருமை அது சாந்தமுதலிய குணங்களோடும் பொருந்திக் கொடுக்கவேண்டிய தாதலின், இங்கே சாந்தமுதலியவற்றின் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வையந் தழைப்ப மறைதழைப்ப மறையோர்புரியு மகந்தழைப்பச், செய்யு முனிவர் தவந்தழைப்பச் செங்கோறழைப்பச் சீர்தழைப்ப, பெய்யு முகில்போற் றுங்கவன்யர் கைமாறுகவா மற்பெறுவோர், கையுந் தழைப்ப மெய்தழைப்பக்கனகம் பொழிவார்காணீரே.

(இ-ள்.) துங்கவன்யர் - உயர்வினையுடைய வன்னியர்கள், வையம் தழைப்ப - உலகு தழைக்கவும், மறை தழைப்ப வேதங்கள் தழைக்கவும், மறையோர் புரியும் மகம் தழைப்ப பிராமணர்கள் செய்யும்யாகங்கள் தழைக்கவும், முனிவர் செய்யுந் தவம் தழைப்ப - முனிவர்கள் செய்கின்ற தவங்கள் தழைக்கவும், செங்கோல் தழைப்ப - இவர்களது செங்கோல்தழைக்கவும், சீர் தழைப்ப - அதனுல் பல சிறப்புகளும் தழைக்கவும், பெய்யும் முகில்போல் - பொழிகின்ற மேகத்தைப்போல், கைம்மாறு உகவாமல் - வரும் பிரயோசனத்தை விரும்பாது, பெறுவோர் - வாங்குபவர்களது, கையுந் தழைப்ப மெய்தழைப்பக் கனகம் பொழிவார் - கைதழைக்கவும் சரீரந் தழைக்கவும் சுவர்ணத்தைப் பொழுகிறுர்கள், காணீரே அறியீர்களா? (சொல்வீர்களாக.) எ-று.

**கருத்து.** வன்னியர்கள் மேகத்தைப்போல வரும் பிரயோசனத்தை விரும்பாது, வரங்குபவர்களது கைதழைக்கவும், மெய்தழைக்கவும், சுவர்னத்தைப் பொழிகிறார்கள் என்பதாம்.

இதில் "பெறுவோர் கையுந் தழைப்பி மெய் தழைப்ப கனகம் பொழிவார்" என்றதற்கு இராமாயணம் பாலகாண்டம் அரசியற்படலம் "ஈந்தேகடந்தா ளிரப்போர்கட லெண்ணினுண்ணு, லாய்ந்தே கடந்தா னறிவென்னு மளாககர் வாளாற், காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத், தோய்ந்தே கடந்தான் றிருவிற் றொடர்போக பௌவம்" என்னும் பாடலிலுங் கூறினர் என்க.

## வள்ளறன்மைச் சிறப்பு.

வள்ளறன்மைச் சிறப்பென்து.வள்ளறன்மையின்பொருமை. அது கொடுத்தல் வண்மையினாலாதலின், இங்கே கொடைவளத்தின் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

## கோச்சகம்.

புள்ளிபல வாயினும்புன் பூசைபுலி யாகவே
வெள்ளிபல வாயினும்வான் வெண்மதியொன்றாகவே
துள்ளல்பல வாயினுமோர் தூய்கருட னாகாவே
வள்ளல்பல ராயினுநல் வன்னியர்க்கொப் பாகரே.

(இ-ள்.) புன் பூசை புள்ளி பல ஆயினும் (ஓர்) புலி ஒப்பு ஆகா - அற்ப தன்மையையுடைய பூனைகள் புள்ளிகளைக் கொண்டு பலவாகக்கூடி இருப்பினும் (அவைகள்) ஒரு புலிக்கு ஒப்பாகா, வெள்ளி பல ஆயினும் வான் வெண்மதி ஒன்று (ஒப்பு) ஆகா-(ஒளி செய்தலைக்கொண்டு) நக்ஷத்திரங்கள் பலவாகக் கூடியிருப்பினும் பெருமையையுடைய ஒரு சந்திரனுக்கு ஒப்பாகா, துள்ளல் பல ஆயினும் ஓர் தூய்கருடன் ஒப்பு ஆகா - (பறத்தற்றொழிலைக்கொண்டு) கொசுகுகள் பலவாக கூடியிருப்பினும் (அவைகள்) ஒரு பரிசுத்தகருடனுக்கு

ஒப்பாகா (எனப்போல்), வள்ளல் பலர் ஆயினும் - (வன்னியர்களையுன்றி மற்றவர்களும்) வள்ளல் தன்மையைக் கொண்டு பல பெயர்களிருந்தாலும், (அவர்களெல்லாம்) நல் ஒரு வன்னியருக்கு ஒப்பு ஆகார் - நன்மையைக் கொண்டிருக்கின்றவர்களாகிய வன்னியர்களுள் ஒருவருக்கு கூட ஒப்பாகமாட்டார்கள். எ-று,

கருத்து. வன்னியர்களே வள்ளறன்மையிற் சிறந்தவர்கள் என்பதாம்.

## அடுத்தவர்க்குத்தாழ்வின்ரேனற் சிறப்பு.

அடுத்தவர்க்குத் தாழ்வின்றெனற் சிறப்பென்பது; தம்மை அடுத்தவர்களுக்குத் தாழ்வில்லை யெனலின் பெருமை. அது வள்ளறன்மைச் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

மேருவினைச் சார்ந்தவரை மிடியணுகு மோதேவ
தாருவினைச் சார்ந்தவரைத் தழற்பசிவந்தணுகிடுமோ
நேருரை செயாவனிய நிருபர்நெடுங் கழலிணையைச்
சாருமவர் தமையிறையுந் தாழ்வென்ப தணுகுறுமோ.

(இ-ள்.) மேருவினைச் சார்ந்தவரை மிடி அணுகுமோ - பொன்மலையை அடுத்தவர்களைத் தரித்திரம் அடையுமா? தேவதாருவினைச் சார்ந்தவரை தழல்பசிவந்து அணுகிடுமோ - கற்பகத் தருக்களை யடுத்தவர்களை அக்கினியின் றன்மையையுடைய பசி வந்துஅடையுமா? (எனப்போல) வனியநிருபர் - வன்னியரென்னும் அரசர்களது, நேர் உரை செயா நெடும் கழல் இணையை - ஒப்பு சொல்லக்கூடாத நீண்ட இரண்டு பாதங்களையும், சாரும் அவர் தமை - வந்து அடுத்தவர்களை, தாழ்வு என்பது அணுகுஉறுமோ - தாழ்வென்று சொல்லப்படுவதானது (எப்பொழுதாயினும்) அடையுமா? எ-று.

கருத்து. வன்னியர்களை அடுத்தவர்களுக்கு எந்த காலத்தும் தாழ்வு அணுகாது என்பதாம்.

## உமையருள்பெற்றோரெனற்சிறப்பு.

உமையருள் பெற்றோரென்ற சிறப்பென்பது—உமையாளின் அருளைப் பெற்றவர்கள் எனவின் பெருமை. அது அடுத்தவற்குத் தாழ்வு வாராதென்னுந் தன்மைக்கு முதற்காரணமாதலின், இங்கே அடுத்தவர்குத் தாழ்வின்றெனற் சிறப்புக்குப்பின்வைத்து கூறினார்.

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கலைமகடன்மைந்தரெனக் கலைஞானம் பெறுகை
யினால்கடலசூழ்பூமித், தலைமகடன் மைந்தரெனச்சகமு
ழுது மரசாளுந்தன்மையானீ, டலைமகடன்மைந்தரென
வாக்கத்தாற் றழலிலவ தரித்த லன்னால், மலைமகடன்
மைந்தரென வரமளிக்கப் பெறும்வனியர் மகிமை
யென்னே. (௬௩)

(இ-ள்.) தழலில் அவதரித்தல் தன்னால் மலைமகள் தன் மைந்தர் என - அக்கினியிற் பிறந்ததினால் பார்வதி தன்புத்திரர்களென, வரம் அளிக்கப் பெறும் வனியர் - வரங்கொடுக்கப் பெறுகின்ற வன்னியர்கள், கலை ஞானம் பெறுகையினால் கலைமகள் தன் மைந்தரென - கலைக்கியானங்களை அடைகின்ற தன்மையால் சாஸ்வதியின் புத்திரர்கள் எனவும், சகம் முழுதும் அரசு ஆளுந்தன்மையால் பூமித்தலைமகள் தன்மைந்தர் என-உலகமுழுவதையும் அரசாளுகின்ற தன்மையினாலே பூமிதேவியின் புத்திரர்கள் எனவும், ஆக்கத்தால் நீடு அலைமகள் தன் மைந்தர் என-ஐசுவரியத்தை ஆண்டிருக்கின்ற தன்மையினால் இலக்ஷ்மியின் புத்திரர்கள் எனவும் (ஆகிறார்கள் ஆதலால்) மகிமைஎன் - இவர்கள், மகிமை என்ன சொல்லுகிறது! எ-று.

**கருத்து.** வன்னியர்கள் அக்கினியிற் பிறத்தலால் பார்வதியானவள் தன் புத்திரர்களென வரங்கொடுக்கப் பெறுகின்ற காரணத்தைக்கொண்டும், கலைக்கியானங்களை அறிந்திருத்தலால் சாஸ்வதியின் புத்திரர்கள் எனவும், உலகமுழு

வதையும் அரசாளுகிறதினால் பூமிதேவியின் புத்திரர்கள் எனவும், ஐசுவரியத்தை யடைந்திருக்கின்றதனால் இலக்ஷுமியின் புத்திரர்கள் எனவும் யாவரும் சொல்லுகின்றார்கள் ஆதலால் இவர்கள் மகிமையையென்ன சொல்லுகிறது என்பதாம்,

## அஷ்டஐசுவரியச்சிறப்பு.

அஷ்டஐசுவரியச் சிறப்பென்பது—எட்டு ஐசுவரியத்தின் பெருமை அது உமையருளைக் கொண்டும் ஆதல்வேண்டியிருத்தலின், இங்கே உமையருள் பெற்றாரெனற் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

### வேறு,

சாகரத்துலகினிட்டைச் சம்புமாமுனி யியற்றும்
யாகவுற்பவராம்வன்ய ரியாவையும்புரக்குமாறு
வகனமக்கள்சுற்றமடிமை பொன்மீணிநெல்லேகம்
ஆகாசாட்சியோடெட் டயிச்சுவரியம் பெற்றாரே.(௬௪)

(இ-ள்.) சாகரத்து உலகில் - சமுத்திரம் சூழ்ந்த உலகத்தில், நிட்டைசம்பு மாமுனி இயற்றும் யாக உற்பவர் ஆம் வன்யர்-யோக நிஷ்டையைக் கொண்ட சம்பு வெனும் மஹா இருடியினாலே செய்த யாகத்திற் பிறந்தவர்களாகிய வன்னியர்கள், யாவையும் புரக்கும் ஆறு - சர்வத்தையும் காக்கும் வழியாக, வாகனம் - (தேர் யானை குதிரை முதலிய) வாகனங்கள் என்ன, மக்கள் - புத்திரர்கள் என்ன, சுற்றம் பந்துக்கள் என்ன, அடிமை - அடிமைகள் என்ன, பொன் - பொன் என்ன, மணி - (மாணிக்கம் வைரம் முதலிய) இரத்தினங்கள் என்ன, நெல் - நெற்கள் என்ன, ஏகம் ஆகு அரசாட்சி ஒடு - ஏகமாகிய அரசாட்சி [அதாவது ஏகசக்கிராதிபத்தியத்துடன்] (ஆகிய) எட்டு ஐச்சுவரியங்களையும் பெற்றவர்களாகிறார்கள். எ-று.

கருத்து. வன்னியர்கள்; வாகனம், மக்கள், பந்து, அடிமை, பொன், இரத்தினம், நெல், ஏக சக்கிராதிபத்தியம்

ஆகிய இவ்வெட்டு ஐசுவரியங்களையும் உடையவர்கள் ஆகிறார்கள் என்பதாம்.

## தசாங்கச்சிறப்பு

*தசாங்கச் சிறப்பென்பது* :— பத்துவித அங்கத்தின் பெருமை. அது அஷ்ட ஐசுவரியத்தோடும் இருத்தலே மேலான்தாதலின், இங்கே அஷ்ட ஐசுவரியச் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

## கோச்சகம்

வளங்குலவு பண்ணாடு மதக்களிறாண் புலித்துவசம், விளங்குமகமேருமனோ வேகரதமும்முரசு, களங்கறுகங்காநதிவெங் கனற்பரிவாடாமாலை, துளங்கலிற் பொற்சிலை பெற்றோர் துதிபெற்றவன்னியரே. (௩௫)

(இ-ள்.) துதி பெற்ற வன்னியர் - யாவரும் துதிக்கப் பெறுகின்ற வன்னியர்கள், வளம் குலவு பண்ணாடு - வளப்பத்தைக் கொண்டு விளங்கா நின்ற தமிழ்நாடும், மதக்களிறு- மதத்தைக் கொண்டப் பட்டத்துயானையும். ஆண்புலித்துவசம் - ஆண்புலிக்கொடியும், விளங்கு மகமேரு - விளங்கா நின்ற மஹாமேரு மலையும்; மனோவேகரதம் - மனோவேகத்தைக்கொண்ட இரதமும், மும்முரசு - மூம்முரசும், களங்கு அறுகங்காநதி - (மூழ்குபவர்களது) குற்றத்தை நீக்கா நின்ற கங்கைநதியும், வெம் கனல் பரி - வெவ்விய அக்கினிக் குதிரையும், வாடாமாலை - பொன்னரிமாலையும், துளங்கல் இல் பொற்சிலை - அசைதலில்லாத அழகிய விற்பெற்ற காஞ்சீ நகரும் (ஆகிய) (இப்பத்தங்கங்களையும்) பெற்றோர் - பெற்றவர்கள் ஆகிறார்கள்.

**கருத்து.** வன்னியர்கள் தமிழ்நாடும், யானையும். ஆண்புலிக்கொடியும், மஹம்மேரு மலையும், மனோ வேகத்தைக் கொண்ட இரதமும், மும்முரசும், கங்கா நதியும், அக்கினிக் குதிரையும், பொன்னரி மாலையும், காஞ்சீ நகரும் ஆகிய பத்தங்கங்களையும் உடையவர்கள் என்பதாம்.

இதில். காஞ்சி நகரானது விற்பெற்ற நகரெனக்குறிக்க வேண்டி "துளங்களில் பொற்சிலை" என்றார் என்க. தசாங்கமாவது-நாடு, நகர், மலை, ஆறு யானை, குதிரை, தேர், மாலை, முரசு, கொடி, இதை தி-கஉ-தி. "ஆறு மலையும் யானையுங், குதிரையும் - நாடு மூருங் கொடியு முரசுந் - தாருந் தேருந் தசாங்கமெனப்பெறும்" என்னும் கசுசு-வது. சூ. க.

இப்படி தசாங்கங் கூறவந்தவர் சேரனுக்குரியது வஞ்சி நாடு, கருவூர் நகர், விற்கொடி, கொல்லிமலை, பொருனையாறு, பாடலக்குதிரை, போந்தின்மாலை, யானை, தேர், முரசு.

சோழனுக்குரியது சோழநாடு, உறையூர் நகர், புலிக்கொடி, நேரிமலை, காவிரியாறு, கோரக்குதிரை, ஆத்திமாலை, யானை, தேர், முரசு·

பாண்டியனுக்குரியது பாண்டியநாடு, மதுரைநகர், மச்சக்கொடி, பொதியமலை, வையையாறு, கனவட்டக்குதிரை, வேப்பமாலை, யானை, தேர். முரசு.

சூரிய குலச் சோழன் கிளைபலவில் ஒன்றாகிய * தொண்டைமானுக் குரியது தொண்டைமானாடு, காஞ்சீபுரம்நகர், புலிக்கொடி, நந்திமலை, பெண்ணையாறு ஆதொண்டைமலை, யானை, குதிரை, தேர். முரசு;

இம்முக்குலத்தவர்களும் ஆதியில் அக்கினி குலத்தவர்களுக்கு உருத்திரபுரம் நாடும், நகரும், சிலாநதி, புலிக்கொடி இரத்தின இரதம், அச்சினிக்குதிரை, அறமாலை, யானை, முரசு; சூரியகுலத்தவர்களுக்கு அயோத்தியை நாடும் நகரும், சா

---

திருக்கழுக்குன்ற புராணம் நாட்டுப்படலம்.

முக்கணான் கணநாதர்க்குன் முதன்மைத் துண்டீரனெண்டு
மிக்க துண்டீர நாடாத் தண்டகவேந்தன் றாங்கி
தக்க தண்டக னன்னாடாய்த் தபனன் மாகுலத்துச்சோழன்
தொக்கதார் தொண்டமான் காத்தாயது தொண்டை நாடே.

என்னும் 2-வது கவியில் தபனன் மாகுலத்துச் சோழன் என்றதனால் உணர்க.

யுநதி, கொடி, இரதம், குதிரை, மாலை, யானை, முரசு; சந்திர குலத்தவர்களுக்கு, அஸ்தினபுரம் நாடும் நகரும், கங்கைநதி, இவர்கள் கொடி மாலை சமயம்போல் பலவிதமாக இருக்கிறது. இரதம் குதிரை, யானை, முரசு; இம்மூவருக்கும் பொதுவில் மலை இமயமென்று சொல்லப்படுகிற, மஹாமேருவே என்க. மன்வந்தரங்களினுதியாய் இன்னும் இம்முக்குலத்துள்ளாகியமற்றைய வரசர்களுடைய தசாங்கங்களைச் சொல்லப்புகின் அதிகமாக விரியும். நிற்க, இவைகளுள் இந்நூலின் மேற்கோள்காட்டிய திருவிளையாடற் கவியில் "தள்ளருமரபின் முன்போல் தமிழ் வேந்தர்தமையுந் தந்தான்" எனக்கூறியது போல, இன்னூலின் ருசு - வதுகவியில் "சகல வளமுந் தமிழ் வேந்தர் இமையப் பொருப்பர் பண்ணுடர்" எனக்கூறியிருக்கிறபடியால், தமிழ்வேந்தர் மூவருள் அக்கினிகுலத்தோனுகிய சோனது தசாங்கத்தைச் சொல்லலாம்; அப்படியல்ல சம்புகுலமென்றுதோன்ற திவாகர நிகண்டுமுதலிய நூற்களில் சோழனுக்கு மாத்திரம் செம்பியனெனப் பெயர்கொடுத்தன் மற்றையவிரண்டு குலத்தைத்தழுவுமென்னுங் கருத்தால் னுறியிருக்கிறதுபோல சோழனது தசாங்கத்தையே கூறிவிடலாம்; அல்லது பாண்டியனது தசாங்கத்தையாவது அப்படி ஆக்கலாம்; இவைகளைவேறே நீக்கி வேறே ஒவ்வொரு குலத்துக்கும் தனித்தனியே உற்பத்தி புராணங்களுள் கூறியிருக்கிறதுபோலவாவது சொல்லிவிடலாம்; அப்படியாக இத்தசாங்கத்திலேயோ முற்கூறிவந்த பகுப்புகளில் ஒவ்வொரு பகுப்பிலும் ஒன்று, அல்லது இரண்டுமூன்றும் கூறுதலையும் எடுத்தாளப்பட்டு முடிவில் பூத்தாக்கித், தசாங்கங் கூறப்பட்டிருக்கிறதே அஃதென்னையோவெனின்? நன்று கூறினுய்! பூவுலகத்தில் அரசர்களுக்குள் மூன்றுதரம் உள. அவையாவன சக்கிரவர்த்தி, மஹாராஜா சிற்றரசர் என. இவைகளில்சக்கிரவர்த்தி மஹாராஜா இரண்டையும் ஒன்றாக்கி முடிமன்னர் அல்லது பெருநிலமன்னர் என்றும், சிற்றரசரைக் குறுநில மன்னர் என்றும் இருதரமாகக் கூறுவாருமுளர். இப்பூவுலகத்

தாசர்களுள் மூன்றுதாமுண்டெனபது என்னை? ஞானவாசிட்டம் ஐந்தவர்கதை.

மைந்தரொருபதுளராகி மறைநூனிறைந்து வளர்ந்தத்றபின்
றந்தை தாயரிறந்ததேகத் தனையர் கைலைத்தல மெய்தி
சிந்தை செய்வார் நல்குரவு தீரவுயர் வன்னியுராவோ
மந்தரிலை சற்றுதலினலதிகநிலை மன்னவராவோம்"

என்னும் ௬ - வது கவியாலும்,

அதுவுஞ்சிறிதாம் புவியனைத்துக் காசராவோ மதுசற்று
னிதிதுன்னிய விந்திர ராவோ நிகழ்த்துமதுவுநெடிதல்ல
பதுமஞ் செறியுமயனுதல் பழுதில்பதவியெனத்துணிந்தா
ருதிதமனத்துப் பதின்மரு மொத்துயரும் பதுமாதனத்திருந்

என்னும் ௭-வது கவியாலும் உணர்க. [து.

இருதாப்பகுதியை திருத்தொண்டர் புராண வரலாறு,

"திரு மறையோர் புராணமவை பதின்மூன்று
சிவவேதிய ரனைவழிப்பட்ட புராண மீரிரண்டு
குரைகழன்மா மாத்திரரோன் றறுவர் முடிமன்னர்
குறுநில மன்னவரைவர் வணிகர்குலத் தைவா
இருமை நெறி வேளாளர் பதின்மூவ ரிடைய
ரிருவற் சாலியர்குயவர் தயிலவினை யாளர்
பரதவர்சான்றார் வண்ணர் சிலைமறவர் நீசர்
பாணரிவ ரோரொருவராம் பகருங்காலே."

என்னும் ௨௬-வது கவியாலுணர்க.

அவை யிற்றை இந்நூலில் தொல் காப்பிய சூத்திரங்கள் போல படை கொடி குடை முரசு களிறு புரவி தேர் வாள் முடி முதலிய மஹாராஜாக்களுக்குரிய அங்கங்களின் சிறப்பையும், இத்தசாங்கத்துக்கு முன்கூறிய ௬௬-வது கவியாகிய அஷ்ட ஐசுவரியச் சிறப்பில் "ஏகமாகாசாக்ஷியோ டெட்ட யிச்சுவரியம் பெற்றாரே" என்றதுடன் ௬௨-வது கவியில் ஆக்ஞை சக்கிரச் சிறப்பாகிய மகாராஜாவிற்கு மேற்பட்ட சக்கிரவர்த்தியின் அங்கத்தையுங் கூறியிருக்கின்றமையால்,

ஒத்துப்பார்க்குமிடத்து சக்கிரவர்த்தி முதல் மேலிரு
கீழிறக்கி மஹாராஜா குறுநிலமன்னர் வரையிலும், கு
மன்னர் முதல் கீழிருந்து மேலேற்றி மஹாராஜா ச
வர்த்திவரையிலும் ஒரே தாமாக்க உலக முழுமையும்
சாக்ஷி செய்து வருகிற க்ஷத்திரிய ரென்னும் வன்ன
களாதலின்; தனியே ஒரு இடத்துக்குரிய தசாங்கத்தை
குறிப்பிட்டால் அவ்வவ்விடத்தை தவிர மற்றைய விடங்க
யுந் தழுவாது என்னுங் கருத்தால் எல்லாத்தசாங்கங் . ளை
ஒன்றாகக்கூட்டி அவ்வவ் விடங்களுக்கும் உரியவர்கள் எ
னும் தன்மை தோன்றும் வண்ணம் பொதுவில் நிதானித்
ஒவ்வொரு பகுப்பிலும் தலைமை உடையது எதுவோ அதை
தனித் தனி ஆய்ந்தெடுத்து அவைகளையும், மேன்மை தோ
றும்படி தேவர்களால் கொடுக்கப்பட்டவைகளையும் சேர்
துத்தசாங்கங்கூறினர் எனஅறிக. அவ்வங்கங்களில் தலை
யுடையவற்றை அடுத்த கசு-வது கவியாகிய அரசின் சிறப
பிற் கூறியிருக்கின்றார். அதைக்கொண்டு மற்றையவைகளை
ம் உணர்ந்து கொள்க

## அரசின்சிறப்பு.

அரசின் சிறப்பென்பது:—தலைமையுடைமையின் பெரு
மை. அது தசாங்கத்தைக் குறித்தே யாதலின், இங்கே
சாங்கச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நாடுபலவினுக்கரசு பண்ணுடிநகர்க்கரசு நலஞ்சே
கச்சி, நீடுவரைகளுக்கரசு [illegible] கரசு நிறைநீர்
[illegible] [illegible] திரன் வெஞ்சி
ங்கங்க [illegible] சூடுமணிமுடியரசுக் கா
லையகிலும் பெரிதாக்கக, [illegible]
னியாசன்றிச் சொலவேறுண்டோ.

(இ-ள்.) நாடு பலவினுக்கு அரசு பண்ணு [illegible]
அகசம் பத்தும் ஆராயுங்கால்) நாடுகள் பலவற்றுள்ளும, [illegible]
மையுடையது தமிழும், நகர்க்கு அரசு நலம் சேர் கச்சி -

நகரங்கள் யெவற்றினுக்குந் தலைமையுடையது நன்மைகள் நிறைந்த காஞ்சீ நகரமும், நீடுவரைகளுக்கு அரசு மாமேரு - உயர்ந்து விளங்கும் மலைகள் எவ்வற்றினுக்குந் தன்மையுடையது மஹா மேரு மலையும், நதிக்கு அரசு நிறை நீர்க்கங்கை - நதிகள் எவ்வற்றினுக்குந் தலைமையுடையது நீர் நிறைந்த கங்கா நதியும், சிலைக்கு அரசு பீடு பெறு அ உருத்திரன் வெம் சிலை - விற்கள் எவற்றினுந் தலைமையுடையது பெருமிதங் கொண்ட அவ்வுருத்திரனுடைய வில்லும் ஆதலின், (இவைகளோடு) அகிலம் பெரிதுகாக்க - உலகத்தை மிகவும் காவல் செய்யும்படி, அரசுக்கு - தலைமையுடைமைக்கு, மணி முடி சூடும் வன்னி அரசு அன்றி - இரத்தின கிரீடந்தரிக்கும் வன்னியர்கள் இராஜ்ஜியபாரஞ் செய்தலை யல்லாமல், வேறு சொல உண்டோ - வேறு சொல்வதற்கு இடம்இருக்கிறதா? (சொல்வீர்களாக) எ-று.

கருத்து. வன்னியர்களுடைய இராஜ்ஜியபாரமே தலைமையுடையது என்பதாம்.

இதில். முன்கூறுத நகர் கூறி, வில்லையுங்கூறி யிரு பதால் விற்பெற்ற நகர் காஞ்சி யென்றும், தலைமையுடை சிலவற்றைக்கூற மற்றையவைகளு மாமெனத் தெரிவித் லுமறிக.

## வில்லின்புகழ் கூறுதற்சிறப்பு.

வில்லின் புகழ்கூறுதற்சிறப்பென்பது - வில்வினது மைசு சொல்லுதலின் பெருமை. அது அரசுக்கு உற தருதலின், [illegible] ன் சிறப்புக்குப் பின்னவைத் கூறினர்.

வேறு.

மேருவொத்த வீரபணணுடர் வில்லைத்
ல்வேண்டுந் திசைமுகனுதியாய
பூவருங்கூரல்வேண்டு முனியகத் தியனனந்தன்
வாய்வளங்கூறல்வேண்டு மற்றெவர் கூறுவாரே. (சுஎ)

(இ-ள்.) வீரபண்ணுடையர் - வீரத்தைக்கொண்டிருக்கின்ற வர்களாகிய தமிழுடையரென்னுஞ் சேர சோழபாண்டிய வன்னியர்களது, மேவு அரு மேரு ஒத்தவில்லை - பெறுவதற்கு அரிய மகம்மேருவைப் போலும் (உயர்ந்து பருத்த) வில்லின் சிறப்பை, (அதன் பெருமை முதலியவை விளங்கத்) தேவரே கூறல் வேண்டும் - தேவர்களே சொல்லல் வேண்டும், திசை முகன் ஆதி ஆய மூவரும் கூறல் வேண்டும் - பிர்ம்மா முதலாகத் திரிமூர்த்திகளுஞ் சொல்லல் வேண்டும், முனி அகத்தியன் அனந்தன் வாய்வளங் கூறல்வேண்டும் - இருடியாகிய அகத்தியனுவது ஆதிசேடனுவது தமது வாய் வளத்தினல் சொல்லல் வேண்டும், மற்று எவர்கூறுவர் - வேறே யாவர் சொல்லல் வல்லவர்கள்? (அனைய தாதலால் என்னுலே சொல்லசாத்தியமாமென்பதுஎன்னை) என்றபடி எ-று.

கருத்து. வன்னியர்கள் வில்லின் சிறப்பை தேவர்களும், திரிமூர்த்திகளும், அகஸ்தியரும், ஆதிசேஷனும் சொல்லல் வேண்டுமே யொழிய எம்போலியரால் சொல்லி நிறைவு பெறுவதன்று என்பதாம்.

இதில் சர்வகலைகளையுந் தெரிந்தவர்களாதலோடும் ஆயுள் மிக்குடையவர்களாதலின், அநாதிகாலமாக இவ்வன்னியர்கள் செய்திருக்கும் அற்புதங்களும் தருமங்களும், உதவிகளும், விஜயங்களும் ஒவ்வொன்றுந்தனித்தனியாக அனுபோகத்துடன் ஆகம அளவையானும், காக்ஷி அளவையானும் சொல்லல் கூடுமென்பார்; தேவரும் மூவரும் அகத்தியனுங்கூறல் வேண்டுமென்றும், கலைகள் ஆயுளோடும் இரண்டாயிரம் நாவு முடைமையால் அனந்தனும் வாய்வளங்கூறல் வேண்டும் என்றுங் கூறினர்.

— இதுவரையில் அரசு கூறினவர் இனி வாழ்த்து கூறினராயிற்றென்க.

# வாழ்த்து.

வாழ்த்தென்பது-துதித்தல் அது இந்நூலும் இந்நூலுட் கூறும் வம்சமும். இவ்வம்சத்துக்குரிய இராஜ்ஜியபாரமும், இராஜ்ஜியபாரத்துக்குக் காவலாகிய அரணும், அரணுக்குப்பலத்தைத்தரும் வின்முதலிய படைகளும் ஊழி ஊழியாக அனவரதமும் நிலைத்து விளங்கல் வேண்டும் என எண்ணிக் கடவுளைத் துதித்தல் பரிசு தருபவன் முன்னிலையிலாதலின், இங்கே பரிசுதருந் தகைமையையுடைய அரசுக்குப்பின்வைத்து பரிசுதரல், வாழ்த்து என இரண்டு சிறப்பாக நான்கு கவிகளால் கூறினர்.

## பரிசுதரற்சிறப்பு.

பரிசுதரற்சிறப்பென்பது:—பரிசுகொடுத்தலின் பெருமை. அது துதித்தலைக்கொள்ளும் அரசினதாதலின், இங்கே அரசுறுப்பாகிய வில்லின் புகழ்க் கூறுதற் சிறப்பைத்தழுவி வாழ்த்துறுப்புர்குக் காரணமாக முதலில்வைத்து கூறினர்.

## வேறு,

அவிக்காதாங்கூர் புனிதர்மகிழ்ந்தருள்வன்னியரை
யாப்புகழச், செவிக்காரமுத மெனக்கேட்டுச் சிந்தை
யுவந்து சீர்தூக்கிப், புவிக்காயிரம்பொ னிறைநீக்கிப்
பொற்றண்டிகைபூ டணத்தோடு, கவிக்காயிரம்பொன்
பரிசளித்தான் கருணாகரத்தொண்ட வன்னியனே.

(இ-ள்.) அவிக்கு ஆதரம் கூர் புனிதர் - ஆவிர்ப் பாகத்துக்கு இச்சை மிகுந்த தேவர்கள், மகிழ்ந்து அருள் வன்னியரை - மகிழ்ந்து கிருபையைச் செய்யாநின்ற வன்னியர்களை, யாம்புகழ - யாம் (அவர்களது குலத்துக்குரிய அரசியிலை...வில் முதலிய அங்கங்களைக்கொண்டு புகழ, கருணாகரத் தொண்ட வன்னியன்) தொண்டமண்டலத்தை ஆளும், கருணாகரச்சோழ

ஞன வன்னியன், செவிக்கு ஆர் அமுதம் எனக்கேட்டு - சீா தக்கு நிறைந்த தேவ அமிர்தம் எனக்கேட்டு, சீர் தூக்கி - கவியின் உறுப்பு முதலியவைகளை ஆராய்ந்து, சிந்தைஉவந்து - மனம்மகிழ்ந்து, புவிக்கு இறை ஆயிரம் பொன் நீக்கி - (எம் மால் அனுபவஞ் செய்துவருகிற) பூமிக்காக (வருஷந்தோறும் கொடுக்கவேண்டிய பகுதியில்) ஆயிரம் பொன்னைத் தள்ளிக்கொடுத்து, பொன் தண்டிகை பூடணத்தோடும் - பொன் பல்லக்கு பலவித ஆபரணங்களோடும், கவிக்கு ஆயிரம்பொன் பரிசு அளித்தான் - கவியொன்றுக்கு ஆயிரம் பொன்னாக (எழுபத்தொன்பதினாயிரம் பொன்னும்) பரிசு கொடுத்தான். எ-று.

கருத்து. யாம் வன்னியர்களை அவர்களது குலத்துக்குரிய அரசியலை விலமுதலிய அங்கங்களைக் கொண்டு புகழ தொண்டமண்டலத்தை யாளும் கருணாகரச் சோழவன்னியனைவன் தேவ அமிழ்தமெனக்கேட்டு, கவியின் உறுப்பு முதலியவைகளை ஆராய்ந்து மகிழ்ந்து, எம்மால் அனுபவஞ்செய்து வருகிறபூமிக்காகவருஷந்தோறும் செலுத்தும்வரியில் பொன் ஆயிரம்நீக்கி, பல்லக்கு ஆபரணங்களோடும் கவியொன்றுக்கு பரிசு ஆயிரம் பொன்னாக எழுபத் தொன்பதினாயிரம் பொன்னும் கொடுத்தான் என்பதாம்.

இக்கருணாகரன் தொண்ட மண்டலம் ஆண்ட சோழன் என்பதை படிக்காசு தம்பிரானால் செய்யப்பட்ட தொண்ட மண்டல சதகம்

"பண்டையோர் நாளையிலோ ரேழ்கலிங்கம் பரணிகொண்டு, செண்டையு மேருவிற்றீட்டு வித்தோன் கழற் செம்பியன் செய், தொண்டை நன்னாடு புரக்கின்ற கோனந்தித் தோன்றலெங்கள், வண்டையர்கோனங்கருணாகரன் றொண்ட மண்டலமே"

என்னும் 92-வது கவியிற்காண்க. அதுவுமன்றி,

முதலாவதகுலோத்துங்க சோழனிடம் மந்திரியாகவும், சேனைத்தலைவனாகவுமிருந்த இக்கருணாகரத்தொண்டமான்

கலிங்கத்தின் பேரிற் போருக்குச் சென்று ஜெயம்பெற்று திரும்பியவனுகையால், ஜெயங்கொண்டார் பாடிய கலிங்கத் துப்பரணி காளிக்குக் கூளி கூறியது 30 - வதுகவியில்,

"இறைமொழிந்தளவி லெழுக லிங்கபடை
யெறிவ னென்றுகழ லிருமுதன
மறைமொ ழிந்தபடி மரபின் வந்ததுல
திலகன் வண்டைநக ரரசனே.

ஷ 52, 53, 54 - வது கவிகளில்

தண்ணாரின் மலர்த்திர டோளபயன்
ருனேவிய சேனை தனக்கடையக்
கண்ணுதிய சோழன் சக்கிரமாங்
கருணாகரன் வாரண மேற்கொளவே"

தொண்டையர்க்கரசின் முன்வருஞ்சுரவி
துங்கவேள்கொடி யுயர்த்தகோன்
வண்டையர்க்கரசு பல்லவர்க்கரசு
மால்களிற்றின்மிசை கொள்ளவே

மறித்தோடி யெவ்வரசுஞ் சரியவென்று
வருமனுக்கைப் பல்லவர்கோன் வளவர் வேந்த
னெறித்தோடை யிலங்குநடைக் களிற்றின்மேற்கொண்
டிரைவேட்ட பெரும்புலி போலிகன் மேற்செல்ல"

என்று வருவனவற்றில், குலோத்துங்கனும், கருணாகரனும் பல்லவச்சோழ அரசர்களென்பதும், கருணாகரன்தொண்டைமான் என்னும் பட்டம் பெற்றவனென்பதும், மன்னர்களுடைய வரலாற்றினையும் வெற்றித்திறத்தையும் புகழும் பரணிப் பிரபந்தத்தில், காண்க.

## வாழ்த்துச்சிறப்பு.

வாழ்த்துச்சிறப்பென்பது; துதித்தலின்பெருமை. அது பரிசுபெற்றபிறகு சொல்லுத லாதலின், இங்கே பரிசுதாற் சிறப்புக்குப்பின் ஈற்றில்வைத்து மூன்று கவிகளால் கூறினர்.